KALKI 13.3.94 ரூ. 3.00

# கல்கி

இலவச
இணைப்பைக்
கேட்டு வாங்குங்கள்!



## வில்லன் நடிப்பிலும் ஹீரோதான்!

# சூதாட்டத்திற்கு இன்னொரு பெயரா?




## சிங்கிள் நம்பர் லாட்டரி :

சீட்டுக் கச்சேரி, குதிரைப் பந்தயம் போன்ற சூதாட்டங்கள் மாதிரி, இப்போது அந்த லிஸ்டில் சேர்ந்திருப்பது ''சிங்கிள் நம்பர் லாட்டரி.'' ஏற்கெனவே, உள்ள வார, மாத குலுக்கல்களைத் தவிர, வடமாநிலத் தலைநகரங்களில் தினசரி ஐந்து நிமிஷங்களுக்கொரு முறை குலுக்கி வெளியிடப்படும் இந்த சிங்கிள் நம்பர் லாட்டரி முடிவுகளை நம்பி, பல பேர் வீட்டில் இருக்கிற தட்டுமுட்டுச் சாமான்களையெல்லாம் மார்வாடிக் கடையில் அடகு வைத்து டிக்கெட் வாங்குகிறார்கள். கையிலே காசு, வாயிலே தோசை என்கிற ரீதியில், பரிசு விழுந்தால் உடனே பணம்! இதன் காரணமாகப் பல பேர் காலையில் லாட்டரிக் கடை திறக்கு முன்னரே தூக்கங்கூடக் கலையாமல் சென்று ஆஜராகி விடுகிறார்கள்.

தமிழகம் உள்பட பல மாநிலங்கள், தங்கள் வருமானத்தைப் பெருக்க, லாட்டரிகள் நடத்துவது தெரிந்ததே. இதில் சில குறிப்பிட்ட மாநிலங்களைத் தவிர (தமிழ்நாடு, ஆந்திரா) மற்றவை லாட்டரி விவகாரத்தைக் குத்தகைக்கு விட்டிருக்கின்றன. குத்தகைக்கு எடுத்தவர்கள் அமைப்பாளர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் வருடத்துக்கு இவ்வளவு என்று அரசுக்குக் கோடிக் கணக்கில் பணத்தை டெபாஸிட் செய்வதோடு, குலுக்கலுக்குக் குலுக்கல் அச்சிடப்படும் டிக்கெட்டுகளின் மதிப்பில் குறிப்பிட்ட சதவீதம் கொடுத்துவிட வேண்டும் என்பது அரசுக்கும் இவர்களுக்குமான ஒப்பந்தம்.

வார, மாத குலுக்கல்கள், வருவலை அள்ளிக் கொடுப்பது போதாது என்று, மாநிலங்களின் (குறிப்பாக வடகிழக்கு மாநிலங்கள்) ஒப்புதலைப் பெற்று, தினசரிக் குலுக்கலையும் துவங்கி விட்டார்கள் இந்த அமைப்பாளர்கள். சில மாநிலங்கள் தினசரி இரண்டு, மூன்று குலுக்கல்களுக்குக் கூட அனுமதி கொடுத்திருக்கின்றன. அப்புறமென்ன? அமைப்பாளர்களுக்குக் கொண்டாட்டம்தான். 'குட்மார்னிங்,' 'குட் ஈவினிங்', 'குஷ்பு டீலக்ஸ்' என்று பல பெயர்களில் டிக்கெட்டுகள்.

முதல் குலுக்கல் காலை ஒன்பதரை மணிக்கு டில்லியில் நடக்கிறதாம். 9.45க்கெல்லாம் எஸ்.டி.டி.யில் நாடெங்கும் முடிவுகள் தெரிவிக்கப்படுகின்றன. இந்த தினசரி குலுக்கல் லாட்டரியில் A, B, C போன்ற வரிசைகள் கிடையாது. வெறும் நான்கு ஐந்து எண்களுள்ள வரிசை நம்பர்கள்தான். இதில் முக்கியமானது கடைசி எண்தான். ஒருவர் 781 என்ற டிக்கெட் வைத்திருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். கடைசி நம்பர் ஒன்று. ஆக இந்த நம்பரில் முடியும் சீட்டு வைத்திருக்கும் சகலருக்கும் (781, 771, 761 என்று ஏகப்பட்டது உள்ளதே) லாட்டரி சீட்டின் மதிப்பை விடப் பத்து மடங்கு பணம் கிடைக்கிறது!

இந்த தினசரி சீட்டுகளின் விலை ரூபாய் இரண்டிலிருந்து ரூபாய் 330 வரை (ஒரு சீட்டுதான்) இருக்கிறது. பதினோரு ரூபாய் சீட்டு வாங்குபவருக்குக் கடைசி எண் சரியாக இருந்து பரிசு கிடைத்தால் ரூபாய் நூறு கிடைக்கும். 330 ரூபாய்க்காரருக்கு அதே பரிசின் மதிப்பு 3000 ரூபாய்! எல்லா நம்பரும் சரியாக இருக்கும் சீட்டுக்கு முதல் பரிசு. ஆனால் அதிகபட்சம் ஐயாயிரம்தான்.

ஒன்பதரை மணி குலுக்கலில் அதிர்ஷ்டமில்லாதவர்கள் மீண்டும் அங்கேயே 9.45 குலுக்கலுக்கு டிக்கெட் வாங்குகிறார்கள்.



இப்படியே மாலை ஐந்து மணி வரை பல இடங்களில் குலுக்கல்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. இதன் காரணமாகப் பலர் அலுவலகங்களுக்கு லீவு போட்டு விட்டுக் கூட லாட்டரிக் கடைகளின் முன்னால் தவம் கிடக்கிறார்கள்.

"இந்த தினசரி குலுக்கல்களில் எங்களுக்கொன்றும் பெரிய லாபம் இல்லைங்க!" என்கிறார் மாம்பலத்தில் கடை வைத்துள்ள பெரிய லாட்டரி வியாபாரி ஒருவர். "இரண்டு ரூபாய் டிக்கெட்டில் எங்களுக்குக் கிடைப்பது பத்து பைசாதான். என்ன லாபம் என்றால் விற்காத டிக்கெட்டுகளுக்குப் பரிசு விழுந்தால் எங்களுக்குத் தானே!" என்கிறார் அவர்.

இதுபோன்று தினசரி 200 குலுக்கல்கள் நடைபெறுவதால் அவற்றில் ஏதேனும் மோசடிகள் நடக்க வாய்ப்பிருக்கிறதா? "சம்பந்தப்பட்ட மாநிலங்களின் பிரதிநிதிகள் முன்னால்தான் இந்தக் குலுக்கல்கள் நடைபெறுகின்றன. அதனால் மோசடி என்ற பேச்சுக்கே இடமில்லை" என்கிறார் அந்த லாட்டரி சீட்டு அதிபர்.

இந்த தினசரி லாட்டரிச் சீட்டுகள் சாதாரணமாகத் தெருவோரத்தில் இருக்கும் லாட்டரி சீட்டுக்காரரிடம் கிடைப்பதில்லை. இதை விற்கவென்று டெலிபோன் சகிதம் பக்காவான கடைகள் உள்ளன. சென்னையில் இதுபோல் முப்பதுக்கும் மேற்பட்ட கடைகள் உள்ளன.

ஒரு கடையில் ஒரு நாளைக்குச் சராசரியாக ஒரு லட்சம் ரூபாய்க்கு இந்த சிங்கிள் நம்பர் லாட்டரிச் சீட்டுக்கள் விற்பனை ஆகிறதாம். 'இந்த குலுக்கலில் இவ்வளவு டிக்கெட்டுகள்தான் அடித்திருக்கிறோம்' என்று அமைப்பாளர்கள் மாநிலங்களுக்குக் கணக்குக் கொடுத்தாலும் அதைவிட இரண்டு மடங்கு(?) அச்சடித்து விற்றுப் பெரும் பணம் சேர்ப்பதாகவும் சொல்கிறார்கள். அமைப்பாளர்களோ இந்தக் குற்றச் சாட்டை மறுக்கிறார்கள்.

உடனுக்குடன் முடிவுகள் தெரிந்து, உடனுக்குடன் பரிசுத் தொகையும் கிடைப்பதால் ஏராளமானவர்கள் போதை மருந்துக்கு அடிமையானது போல் இதிலும் அடிமையாகிக் கிடக்கிறார்கள். இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் இந்த அடிமைகளின் எண்ணிக்கையும் அதிகம் என்பதால் இந்த சிங்கிள் நம்பர் லாட்டரியைத் தடை செய்ய வேண்டுமென்று சிலர் குரல் கொடுத்துள்ளனர். ஆனால் அமைப்பாளர்களுக்கு அரசியல்வாதிகளை வளைத்துப் போடத் தெரியாதா என்ன? இன்னமும் எவ்வளவு பேர் ஓட்டாண்டியாக வேண்டியிருக்கிறதோ!

— ப்ரியன்

வாசகர் யோசனை : எம். அண்ணாதுரை





## கருணாகரனுக்கு ஹெலிகாப்டர் ராசி இல்லை

கொச்சியில் நடந்த தேசிய கூடைப் பந்துப் போட்டியின் இறுதியாட்டத்தில் வெற்றி பெற்றவர்களுக்குக் கருணாகரன் பரிசு வழங்கும் நிகழ்ச்சி ஏற்பாடாகியிருந்தது. அதில் கலந்து கொள்வதற்காக ஒரு ஹெலிகாப்டரை அனுப்புமாறு முதல்வர் அலுவலகத்திலிருந்து கடற்படைக்கு டெலிபோன் செய்தார்கள். 'ஹெலிகாப்டர் தயாராக இல்லை; அனுப்ப இயலாது!' என்று பதில் வர, முதல்வர் அலுவலகத்துக்கு ஒரே வியப்பு! உடனே டெல்லியில் தொடர்பு கொண்டும் பயனில்லாமல் போக, பிரதமர் அலுவலகத்துடன் தொடர்பு கொண்டார்கள். அங்கிருந்தும் சரியான பதில் கிடைக்கவில்லை! அதனால் பயணத்தையே ரத்து செய்துவிட்டார் முதல்வர்.

இதுவரை, பலமுறை நேவி ஹெலிகாப்டரை இதே முதல்வர் பயன்படுத்தியிருக்கிறார் என்கிற போதிலும் இப்போது ஏன் அனுப்பவில்லை? 'இயந்திரக் கோளாறுதான் காரணம்' என்று நேவிக்காரர்கள் சொல்வதை உண்மையான காரணம் என்று யாரும் ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. ஏனெனில் கடற்படையினரிடம் ஒரே ஒரு ஹெலிகாப்டர்தானா இருக்கிறது? உண்மையான காரணம் முதல்வர் - பிரதமர் நெருக்கம், புழுக்கமாகிக் கொண்டிருப்பதுதான் என்கிறார்கள்!

●● கேரள சட்டசபைக் கூட்டத்தில் அன்று ஒரே சிரிப்பு மயம்தான்! சிரிப்புக்கான நாயகன், கல்வி மற்றும் கலாசார அமைச்சர் ஜேக்கப். விஷயம் இதுதான் : இரிஞாலக்குடா தொகுதியின் எம். எல். ஏ. வான லோனப்பன் நம்பாடன் தமது தொகுதியின் பிரச்னைகள் பற்றி, ஒரு குற்றச் சாட்டைக் கூறினார். அமைச்சர் சும்மா இருந்திருக்கக் கூடாதா? உடனே எழுந்து, ''இது திருமதி மீனாட்சி தம்பான் எம். எல். ஏ. வின் தொகுதியல்லவா? அவர்கூட இந்தப் பிரச்னை பற்றி என்னிடம் பல முறை பேசியிருக்கிறார்!'' என்றார்.

இதைக் கேட்ட அனைவருக்கும் ஒரே அதிர்ச்சி. காரணம், திருமதி மீனாட்சி தம்பானின் தொகுதி கொடுங்கல்லூர் என்பதும் இரிஞாலக்குடாவுக்கு லோனப்பன் நம்பாடன்தான் எம். எல். ஏ. என்பதும் கூட அமைச்சருக்குத் தெரியாமலிருக்கிறதே என்று!

இதைச் சுட்டிக்காட்டிய போதாவது அமைச்சர் பேசாமல் இருந்திருக்கலாம். இருக்கவில்லை! ''நான் என்ன சொல்ல வருகிறேனென்றால், லோனப்பன் கூறிய பிரச்னை பற்றி அவரைவிட மீனாட்சி என்னிடம் பல முறை எடுத்துக் கூறியிருக்கிறார் என்பதுதான். அதோடு, இந்தப் பிரச்னைக்காக திருமதி மீனாட்சியின் அப்பா கூட ஒரு போராட்டம் நடத்தியிருக்கிறாரே!'' என்றார் அமைச்சர்.

அவையில் மீண்டும் வெடிச் சிரிப்பு. காரணம், போராட்டம் நடத்தியது மீனாட்சியின் தந்தையார் அல்ல; அவரது கணவர் என்பதுதான்!

கல்வி மற்றும் கலாசார அமைச்சருக்கு இத்தனை அறியாமையா?

●● அச்சுதமேனன் முதல்வராக இருந்தபோது (74-இல்) அன்றைய உணவு அமைச்சர் போன் பி. மாணியும் அன்றைய உணவு இலாகா கூடுதல் செயலரும் சிவில் சப்ளைஸ் டைரக்டருமான கிருஷ்ணகுமாரும் சேர்ந்து செய்த கோதுமை ஊழல் பற்றி இப்போது பேசப்படுகிறது. பத்தாயிரம் டன் கோதுமையை டெண்டர் ஏதும் விடாமலேயே வாங்கிக் கமிஷன் பெற்றிருக்கிறார்கள் என்பதுதான் அது. அவர்கள் அப்போது கொடுத்த விலை குவிண்டாலுக்கு 185 ரூபாய். அன்றைய மார்க்கெட் விலை 150 ரூபாய்தான். பஞ்சாபிலிருந்து கேரளாவுக்கான போக்குவரத்துச் செலவையும் சேர்த்தால்கூட 157 ரூபாய்தான் ஆகிறது. எனவே, அதுபற்றி இப்போது விசாரணை நடத்த வேண்டுமென்று பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி வேண்டுகோள் விடுத்துள்ளது. அன்றைய கோதுமை ஊழலில் சம்பந்தப்பட்ட அதிகாரியான எஸ். கிருஷ்ணகுமார், இன்றைக்கு மத்திய அமைச்சராக இருக்கும் சூழ்நிலையில் விசாரணை நடத்தப்படுமா? அப்படியே நடந்தாலும் உண்மை கண்டறியப்படுமா? சந்தேகம்தான்!

திருவனந்தபுரத்திலிருந்து :

**எஸ். எஸ். மணி**

அமைதிப்படை. சத்யராஜின் நூற்றியிருபதாவது படம். கடந்த நூற்றுப் பத்தொன்பது படங்களிலும் தம்மை மெருகேற்றிக் கொண்டே வந்து, கடைசியில் ஓர் அதிரடி போல் அவர் தமது நடிப்பாற்றலின் உச்சத்தைத் தொட்டிருக்கும் சினிமா. இந்தப் படத்தின் மூலம்தான், நடிப்பின் ஒரு புதிய பரிமாணத்தைத் தம்மால் எட்ட முடிந்தது என்பதை, சத்யராஜே ஒப்புக் கொள்கிறார்.

ஒரு ஹீரோவாகத் தம்மை நிலை நாட்டிக் கொண்ட நிலையில், மீண்டும் இந்தப் படத்தில் ஒரு வில்லனாகக் கீழிறங்கி வந்து நடிக்க சத்யராஜ் எப்படி ஒப்புக் கொண்டார்?

''நானும் ஆரம்பத்தில் இந்த கேரக்டரில் நடிப்பதற்குக் கொஞ்சம் யோசிக்கத்தான் செய்தேன். ஆனால் டைரக்டர் மணிவண்ணன் அமைதிப்படையின் கதையையும் என்னுடைய கேரக்டரையும் விளக்கிச் சொல்லச் சொல்ல, எனக்கு, அதுவொரு வில்லன் கேரக்டராகப் படவில்லை; ஒரு சவாலான கேரக்டராகவே பட்டது. அதனால் உடனே சரியென்று ஒப்புக் கொண்டேன்.''

ஆயினும் செண்டிமெண்ட் நிறைந்தது சினிமா உலகம். இன்னின்னார் இன்னின்ன கேரக்டர்களுக்குத்தான் லாயக்கு என்று கல்பத்தில் முத்திரை குத்திவிடுகிற உலகம். எனவே, சினிமா சம்பந்தப்பட்ட ஒவ்வொருவரும் தங்களது இமேஜைக் காப்பாற்றிக் கொள்வதில் மிகவும் கவனமாக இருப்பார்கள். இந்த விஷயத்தில் சத்யராஜ் எப்படி?

''இமேஜ் என்பது வெறும் 'இமேஜ்'தான். அது நிஜமல்ல. இல்லையென்றால், ஏறத்தாழ எழுபத்தைந்து படங்களில் வெறும் வில்லனாகவே நடித்த நான், பிறகு எப்படி ஹீரோவாகியிருக்க முடியும்? ஒரு நடிகனின் திறமை என்பது, அவன் ஹீரோவாக நடித்தால்தான் வெளிப்படும் என்பதில்லை; வில்லனாக நடித்தாலும் வெளிப்படும் என்பதற்கு அமைதிப்படையே ஒரு சாட்சி தானே! இல்லையென்றால் படத்தைப் பார்த்த ரஜினி சார், இரண்டு முறை எனக்கு போன் செய்து பாராட்டியிருப்பாரா?'' என்று கேட்கிறார் சத்யராஜ்.

ஒருநாள் இரவு சத்தியராஜுக்கு போன் செய்து பாராட்டிய ரஜினி காந்த், மறு நாள் மீண்டும் டெலிபோன் செய்தாராம். 'நேற்றுத்தானே போன் செய்து பாராட்டினீர்கள்!' என்று கேட்ட போது, 'இல்லை; நேற்றுப் பாராட்டியதில் எனக்கு ஒரு திருப்தி ஏற்படவில்லை; அதனால்தான் இன்றைக்கும் போன் செய்கிறேன். ரொம்பவும் பிரமாதமாகச் செய்திருக்கிறீர்கள்!' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பாராட்டினாராம் ரஜினி.

இப்படி, அனைவரும் ஒருமித்த குரலில் சத்யராஜைப் பாராட்டுகிறார்களே, இதற்கு என்ன காரணம்? அவரது கிரியேடிவிடியா? இல்லை சத்யராஜிடம் வேலை வாங்கிய டைரக்டர் மணிவண்ணனின் திறமையா?

''நான் கேரக்டரை விளக்கிச் சொன்னதும் சத்யராஜ் அதை அப்படியே மனத்தில் வாங்கிக் கொண்டு

# சத்யராஜ்: வில்லன் நடிப்பிலும்



ரொம்பவும் ஈடுபாட்டோடு நடித்தார். அதுதான் காரணம்!'' என்கிறார் டைரக்டர் மணிவண்ணன்.

ஆனால், சத்யராஜோ, ''ஒரு நடிகனுக்குக் கிரியேடிவிடி என்பது ரொம்ப நாளைக்குத் தொடர்ந்து கைகொடுக்க முடியாது. ஒரே சமயத்தில் நான்கைந்து படங்களில்

நடிக்க வேண்டிய ஒரு சூழ்நிலை ஏற்படும்போது, அவனும் ஒரு டைப்பிஸ்ட் மாதிரி - ஒரு குமாஸ்தா மாதிரி - ஒரு ரொட்டீன் வாழ்க்கைக்கு வந்து விடுகிறான். சிந்திப்பதற்கெல்லாம் அவனுக்கு நேரமிருப்பதில்லை. எனவே, ஒரு நடிகன் ஒரு கேரக்டரில் பிரகாசிக்கிறான் என்றால், அவனிடம் டைரக்டர் திறமையாக வேலை வாங்கியிருக்கிறார் என்பதுதான் உண்மை'' என்கிறார்.



அமைதிப்படையை விட்டு விட்டுப் பார்த் தால், சத்யராஜ் நடித்த மற்ற நூற்றுப் பத்தொன்பது படங் களில், நூறு நாட்கள் ஓடிய படங்கள் இருபத்து நான்கு தான். இருநூறு நாட்கள் ஓடி யது, கடந்த ஆண்டு வெளிவந்த 'வால்டர் வெற்றிவேல்' மட்டும்தான். ஆயினும் சத்ய ராஜுக்கு எப்போதும் திரை உலகில் டிமாண்ட்!

''காரணம், 'மினிமம் கியாரண்டி' என்று சினிமா உலகில் சொல்வார்களே, அது தான். சத்யராஜை வைத்துப் படம் பண்ணினால் நிச்சயம் கையைக் கட்டுவிடாது என்கிற நிலை தான்!'' என்று சிரித்துக் கொண்டே சொல்லும் சத்யராஜுக்கு, சினிமா வில் நடக்கும் ஒரு விஷயம்

# ஹீரோதான்!

மட்டும் பிடிப்பதேயில்லை. சொன்னால் நம்பமாட்டீர்கள். அதுதான் பாடல் காட்சி கள்!

''டூயட் காட்சிகளில் நடிப்பதற்கு எனக்கு மிகவும் கூச்சமாக இருக்கும். சினிமா என்பது வாழ்க்கையை அப்படியே பிரதிபலிப்பதில்லை என்றாலும் வாழ்க்கை யில் நடப்பதைத்தான் சொல்லுகின்றது. வேண்டுமானால் கொஞ்சம் மிகைப் படுத்திச் சொல்கிறது என்று கூறலாம். ஆனால் இந்தப் பாடல் காட்சிகளோ - குறிப் பாக டூயட் காட்சிகளோ - வாழ்க்கையி லேயே இல்லாத ஒன்றைப் பொய்யாகச் சித்திரிக்கின்றன!''

அப்புறம் ஏன் அதைத் தவிர்க்கக் கூடாது?

''இந்த இடத்தில் நான் காம்ப்ரமைஸ் செய்து கொண்டுதான் ஆக வேண்டும்.



* டைரக்டர் மணிவண்ணன்

காரணம், ஒரு படத்தின் பப்ளிசிடிக்குப் பாடல்கள்தான் முக்கிய காரணமாகின்றன. படம் வெளியாகுமுன்பே பாடல்கள் வெளிவந்து விளம்பரம் கொடுக்கும். படம் வெளியான பிறகும் டெலிவிஷன், ரேடியோ போன்றவற்றில் பாடல்களைப் போடுவார்கள். பாடல்களே இல்லாவிட்டால் அந்தப் படம், மிகச் சுலபமான முறையில் கிடைக்கிற மிகப் பெரிய விளம்பர மீடியாக்களைப் பயன்படுத்திக் கொள்ள முடியாமலே போய்விடும்!''

அமைதிப்படையில் மட்டுமல்ல; இதற்கு முந்தின இவரது படமான 'ஏர் போர்ட்'டில் கூட அரசியல்வாதிகளைத் தானே சமூக விரோதிகளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இது குறித்து இவரது கருத்து என்ன?

''முன்பு வாத்தியார் (எம்.ஜி.ஆர்.) படங்களிலெல்லாம் பெரும்பாலும் பணக்காரர்களையும், ஜமீன்தார்களையும்தான் வில்லன்களாகச் சித்திரித்திருப்பார்கள். இன்றைக்கு அப்படியில்லை. காரணம், இன்றைய சமூக அமைப்பு மாறிப்போய் விட்டது. இந்த அமைப்பில் முக்கியப் பங்கு வகிப்பவர்கள் அரசியல்வாதிகள்தாம்! சமூகத்திலுள்ள ஒரு சாதாரண ரவுடியை எதிர்ப்பதில் ஒரு ஹீரோவுக்கு என்ன ஹீரோயிஸம் வந்து விட முடியும்? அதனால்தான் சமூகத்தின் மிக முக்கியமான இடத்திலிருக்கும் அரசியல்வாதிகளில் தீயவர்களை இனம் காட்டி எதிர்க்க வேண்டியிருக்கிறது.''

அமைதிப்படையைப் பார்த்த பிறகு, 'உங்களைப் போலவே சத்யராஜ் மிகச் சிறப்பாக நடித்திருக்கிறார்!' என்று சிவாஜியிடம் முக்தா சீனிவாசன் சொன்னாராம். அதற்கு சிவாஜி, 'கவுண்டருக்கென்று (சத்யராஜை சிவாஜி அப்படித்தான் சொல்வாராம்) தனி பாணி இருக்கிறது. அந்தப் பாணியில் அவர் பிரமாதப்படுத்தியிருக்கிறார்!' என்றாராம். ஆக, நடிப்பில் 'சத்யராஜ் பாணி' என்ற ஒன்று இருக்கிறது என்பதை சிவாஜியே அங்கீகரித்து விட்டதில் சத்யராஜுக்கு ஏக சந்தோஷம்!

இந்த பாணி சத்யராஜுக்கு எப்படி வந்தது? ஆரம்பத்தில் சில படங்களில் எம்.ஜி.ஆர். பாணியில் நடித்ததற்கு என்ன காரணம்?

''அது ஒரு தற்செயலான விஷயம். ஷூட்டிங் பிரேக்கின் போது நான் வாத்தியார் பாணியில் நடித்துக் காட்டுவேன், ஒரு பொழுது போக்கு போல. அதைக் கண்டு என்னை அப்படியே சில படங்களில் நடிக்குமாறு வற்புறுத்தியதால், நானும் அப்படியே நடிக்க வேண்டியதாயிற்று; அவ்வளவுதான். பிறகுதான் எனக்கு என்று ஒரு தனி பாணி உருவானது!'' என்று கூறும் சத்யராஜ், தமக்கென்று ஒரு பாணியை உருவாக்கிக் கொள்கிற அளவுக்குப் பாரதிராஜா உள்பட பல டைரக்டர்கள் வாய்ப்பளித்த போதிலும், நிறைய வாய்ப்புகள் கொடுத்த டைரக்டர் மணிவண்ணனை நன்றியுடன் நினைவு கூர்கிறார்.

சத்யராஜ்மேல் மணிவண்ணனுக்கு என்ன அப்படியோர் ஈடுபாடு? ''நாங்கள் இருவரும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள் என்பது மட்டும்தான் காரணம் என்று சிலர் நினைக்கக் கூடும். உண்மை அதுவல்ல; சத்யராஜின் ஆறடிக்கு மேலான உயரமும் சொல்வதைச் சட்டென்று புரிந்து கொண்டு, அதை மிகவும் இயல்பான முறையில் நடித்துக் காட்டும் திறமையும்தான் காரணம். ஆயினும் நான்தான் அவரை 'மோல்ட்' செய்தேன் என்பதை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது!'' என்கிறார் டைரக்டர் மணிவண்ணன்.

அமைதிப்படை தவிர, சத்யராஜுக்குத் தாம் நடித்த படங்களில், பூவிழி வாசலிலே, வேதம் புதிது, வால்டர் வெற்றிவேல், நடிகன் ஆகிய படங்களின் கேரக்டர்கள்தாம் மிகவும் பிடித்திருப்பதாகக் கூறுகிறார்.

''காரணம், அவை எல்லாமே வழக்கமாக எனக்குக் கிடைத்த கேரக்டர்களைவிட வித்தியாசமானவை என்பதுதான். அதிலும் நடிகன் பட கேரக்டர் காமெடியானது. அதை ஏற்ற போதுதான் காமெடியாக நடிப்பதில் உள்ள சிரமத்தை என்னால் உணர முடிந்தது!'' என்று கூறும் சத்யராஜ் கடைசியாகச் சொன்னது : ''மகாநதியில் கமல் ஹாசன் என்னமாய் நடித்திருக்கிறார்! படம் பார்க்கும் போது நான் அழுதுவிட்டேன்!''

அடுத்தவரைப் பற்றி ஒரு வில்லனால் இப்படியொரு விமர்சனம் செய்ய முடியுமா? நிச்சயமாக ஒரு ஹீரோவால்தான் முடியும்.

– இளங்கோவன்

படங்கள் : கோபிநாத்

* ஜுமாவின் வயிற்றைக் கிழித்து ஓர் ஆபரேஷன்...



**"ப**த்திரிகை நிருபர்களால் குண்டர்கள் தாக்குதலைச் சமாளிக்க முடியவில்லை; எனவே குண்டர்களையே பத்திரிகை நிருபர்களாக நியமித்துவிட்டேன்!" - இப்படி ஒரு பத்திரிகை ஆசிரியர் சொல்வதாகச் சில நாட்களுக்கு முன்பு ஒரு பம்பாய் பத்திரிகையில் கார்ட்டூன் வெளியானது.

பின்னணி இதுதான் :

இந்தி நாளிதழ் 'சிட்டிஸன்', பால் தாக்கரேவின் ஔரங்காபாத் விஜயம் பிசுபிசுத்துப் போனதாய் விமர்சித்துக் கட்டுரை எழுதியது. அந்தக்கட்டுரை வெளியானபின் நடந்த ஒரு பத்திரிகையாளர் கூட்டத்தின் போது, சிட்டிஸன் பத்திரிகை துணை ஆசிரியர் முஸ்தபா ஆலம், உடனடியாய் வெளியேற வேண்டும் என்று பால்தாக்கரே உத்தரவிட, ஆலம் அதை எதிர்த்து, "பத்திரிகைச் சுதந்திரத்தை நசுக்கும் முயற்சி" என்றார்.

ஆலத்தை வலுக்கட்டாயமாய் தாக்கரே வெளியேற்றும்படி தம் 'சேனை'க்கு உத்தரவிட, அடுத்த நிமிடம் ஆலம் வெளியேற்றப்பட்டார். பத்திரிகையாளர்கள் வெளிநடப்புச் செய்தனர்.

சுமார் முப்பது 'சேனை' குண்டர்கள், பத்திரிகையாளர்களைத் தாக்கினர். லோக் விஜய் பத்திரிகையின் நிருபரான ஆத்மராம் மகாஜன் அடிபட்டு மயக்கம் போட்டு விழுந்தார். தவிர, பத்துப் பத்திரிகையாளர்களுக்குக் காயம்.

போலீஸ், மூன்று சிவசேனைத் தொண்டர்களைக் கைது செய்துள்ளது. பால் தாக்கரே மீதும் கேஸ் பதிவு செய்துள்ளது. முதல்வர் பவார், "இது விஷயமாய் உரிய நடவடிக்கை எடுக்கப்படும். பின்விளைவு எத்தகையதாக இருந்தாலும் சந்திக்கத் தயார்" என்று கூறியுள்ளார்.

ஏற்கெனவே மாநில அரசு, பால் தாக்கரே மீது, பத்து கேஸ்கள் பதிவு செய்துள்ளது. ஔரங்காபாத் கேஸ் பத்தோடு பதினொன்றா, இல்லையா என்பது போகப் போகத்தான் தெரியும்.

# கடத்தலைத் தவிர்க்க ஓர் ஆபரேஷன்!

**ப**ம்பாய் ஜே. ஜே. ஆஸ்பத்திரியில் பலத்த போலீஸ் பாதுகாப்புடன் நடந்த ஓர் அறுவைச் சிகிச்சையில், வயிற்றிலிருந்து 70 காப்ஸ்யூல்கள் வெளியே எடுக்கப்பட்டன. அவற்றின் உள்ளே 650 கிராம் ஹெராயின் போதை மருந்து!

மடோன்டு முகமது ஜுமா என்பவன், தான்சேனியப் பிரஜை. பம்பாய் விமான நிலையத்தில், எதியோபிய விமானத்தில் ஏறிப் பறப்பதற்கு முன் அவன் போதைப் பொருள் கடத்தல் தடுப்பு போலீசால் சந்தேகத்தின் பேரில் கைது செய்யப்பட்டான்.

எக்ஸ்-ரே எடுத்ததில் வயிற்றின் அடிப் பகுதியில் ஏராளமான காப்ஸ்யூல்கள் இருப்பது தெரிய வந்தது. அவை தாமாகவே வெளியே வந்துவிடும் என்று நினைத்த டாக்டர்கள், ஜுமாவை இரண்டு நாட்கள் தம் கண்காணிப்பிலேயே வைத்திருந்தனர். ஆனால் காப்ஸ்யூல்கள் வெளியே வரவில்லை. டாக்டர்கள் ஆபரேஷன் செய்வது என்று முடிவெடுத்தனர். போதை மருந்து காப்ஸ்யூல்களை வெளியே எடுத்தனர். ஜுமா இப்போது நன்றாய் உடல் தேறி வருகிறான்.

ஆயினும் என்ன? தாய்நாடு திரும்ப நினைத்தவன் கம்பி எண்ணப் போக வேண்டியதுதான்!

பம்பாயிலிருந்து :
**மௌஷ்மி**
படம் - நன்றி :
**டைம்ஸ் ஆஃப் இந்தியா**


பட்ஜெட்டாம், பட்ஜெட்டு... தமிழ்நாட்டுக்கு ஒரு இழவும் காணோம்! ரயில்வே பட்ஜெட்லேயும் நம்மை விட்டுட்டாங்க... இருக்காங்க, நிதி அமைச்சரு...
....நாமாவது தமிழ் நாட்டுக்கு ஏதாவது பண்ணுவோம்... முதல்ல மின்சாரக் கட்டணத்தை உசத்துங்க! மத்ததை நம்ம பட்ஜெட்ல கவனிச்சுக்குவோம்!
பிரமாத பட்ஜெட் போட்டிருக்கேன்! வளர்ச்சிக்கு அமோகமா உதவப்போவது!...
பற்றாக் குறையின் விளைவான பணவீக்கம்
ஐயோ! இன்னுமா வளரணும்? தாங்குமா... எங்கே போயி இடியப் போகுதோ, எப்ப வெடிக்கப் போகுதோ?...
கிளிபதிகளை அமைத்து நான்தான் போஸ்டர் அச்சடித்து ஒட்டினேன்!
கனக முகன்
என்னுடைய ரோஜா பிரஸ்ஸில் போஸ்டரை அச்சடித்திருக்கவே முடியாது!
ரோஜா உரிமையாளர்
போஸ்டர் ஒட்டியவனை கண்டு பிடிக்கவேண்டும் கிளிபதிகள் என் துறையில இருப்பாங்களே!
ஐயையோ! என் பேர்ல அநியாயமா பழி சுமத்துறாங்களே!
யார் எக்கேடும் கெட்டுப் போகட்டும், எனக்கென்ன? நான் வாழ்க, சசிகலா வாழ்க!




ஸ்ரீ

# கல்கி





1994
மார்ச் 13
மலர் : 52
இதழ் : 33
ஸ்ரீமுக
மாசி 29


தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## மன்மோகனின் மணிபர்ஸில் ஓட்டை!

மன்மோகன் சிங்கின் தலைப்பாகைக்குள்ளே அபார மூளை என்றால், தாடிக்குள்ளே எக்கச்சக்க தந்திரம்! ''ஐயோ! இவ்வளவு மான்யங்களை வழங்கினால் எப்படி கட்டுப்படியாகும்!'' என்று ஒரு குரல் அழுது, அனுதாபத்தைப் பெற்றவாறே, அரிசி, சர்க்கரை, டீசல், பெட்ரோல், சமையல் வாயு முதலியவற்றின் விலைகளை முதலில் உயர்த்தினார். அப்புறம் ரயில்வே பட்ஜெட்டிலும் பயணக் கட்டணங்களும் சரக்குக் கட்டணங்களும் உயர வழிவகுத்தாயிற்று. எல்லாமாகச் சேர்ந்து விலைவாசிகளை விண்ணளாவச் செய்துள்ளன.

இப்போது மந்திரவாதி போல், ''பார்! பட்ஜெட்டில் சலுகைகள் பார்!'' என்று இடது கரத்தாலும் வலது கரத்தாலும் வள்ளலாக வாரி வழங்கியிருக்கிறார். கம்பெனி வருமானத்துக்கு வரி குறைப்பு, உற்பத்தி வரி, சுங்க வரிச் சலுகைகள் என்று தாராளம் காட்ட, தொழில் துறை அதிபர்கள் சந்தோஷத்தில் மூச்சுத் திணறுகின்றனர். ஏழை பாழைகள்தாம் வழக்கம்போல் வயிற்றைப் பிசைந்து கொண்டு குடிசை வாசலில் குந்தியிருக்கின்றனர்.

மன்மோகன் சிங்கின் பட்ஜெட் அறிவு பூர்வமானதே. தப்புச் சொல்ல முடியாது. அபரிமித வரிகளாலும் கட்டுப்பாடுகளாலும் இங்கே தொழில் துறை மெல்ல மெல்லச் சாக அடிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. கடந்த சில ஆண்டுகளாகத்தான் மன்மோகன், பிராண வாயு அளித்ததுடன், இந்த ஆண்டு பட்ஜெட் மூலம் தொழில் துறையை உற்சாகத்துடன் துள்ளவும் செய்துள்ளார். இவற்றின் ஒட்டுமொத்த நற்பலனாக சர்வதேச நிதி நிறுவனக் கடனை காலக்கெடுவுக்கு முன்னதாகவே திருப்பித் தரும் துணிவும் ஏற்பட்டிருக்கிறது, அவருக்கு!

ஆயினும் விலைவாசிகள் மட்டும் ஏறிக் கொண்டே போகிறதே, ஏன்? வருமான வரி விலக்கு வரம்பை ரூ. 35,000 ஆக உயர்த்தியும் போதவில்லையே, எதனால்? அத்தியாவசியச் செலவுகளைக் கூடச் சமாளிக்க முடியாமல் தவிக்கிறோமே, என்றால், இதற்கு மன்மோகன்சிங் பேச்சிலேயே விடை காணலாம்! ''பற்றாக்குறை மேலும் மேலும் அதிகரிக்கிற சூழலில் வரிச் சலுகைகள் அளிப்பது பொருளாதார விதிமுறைகளை மீறிய செயலே; ஆயினும் தொழில்துறை சுறுசுறுப்பு அடைந்து வரும் தருணத்தில், அதற்கு மேலும் ஊக்கம் தரவே விரும்புகிறேன்; கணக்கம் காண்பதைத் தவிர்க்க எண்ணுகிறேன்'' என்கிறார் மன்மோகன் சிங். இங்கேதான் இடிக்கிறது!

சென்ற ஆண்டில் பற்றாக்குறை என பட்ஜெட்டில் நிர்ணயிக்கப்பட்டதை விடவும் அசல் பற்றாக்குறை பலமடங்காக உயர்ந்தது. கிட்டத்தட்ட அறுபதாயிரம் கோடி! இந்த ஆண்டும் 6000 கோடி பட்ஜெட் பற்றாக்குறை. இதுவும் ஆண்டு முடிவில் பல மடங்காக உயர்வதற்கான வாய்ப்பே மிகுதி. 'ஏன், இதைக் கட்டுப்படுத்தக் கூடாதா?' என்றால், ''எனக்கு அரசியல் நிர்பந்தங்கள் உள்ளன'' என்கிறார் நிதி அமைச்சர், நாசூக்காக. வார்த்தை ஜாலத்தை ஒதுக்கினால், பல்வேறு அரசு இலாக்காக்களில் நடக்கும் உற்பத்திக்கு உதவாத, ஊதாரிச் செலவினங்களே காரணம் என்பது புரிய வரும்.

வரிச் சலுகைகள் காரணமாக சேமிப்பு பெருகும், முதலீடுகள் அதிகரிக்கும், தொழில் வளம் பெருகும், இதனால் கூடுதலாகக் கிடைக்கும் வரி வருவாய் பற்றாக்குறையை இட்டு நிரப்பி விடும் என்று கனவு காண்கிறார் மன்மோகன் சிங். சென்ற ஆண்டும் அதற்கு முன்னரும் அவரது இந்தக் கனவு பொய்த்துப் போனதை அவர் மறக்கவோ, மறைக்கவோ முடியாது.

அறுபதாயிரம் கோடி அரசுக்குப் பற்றாக்குறை என்றால் என்ன அர்த்தம்? வட்டிக்குக் கடன் வாங்கி இட்டு நிரப்பியது போக, பாக்கி பத்தாயிரம் கோடிக்கு நாசிக் அச்சுக்கூடம் ஓவர் டைம் வேலை செய்து நோட்டுக்களை அச்சடித்துத் தள்ளும். பணப்புழக்கம் அதிகரிக்க, விலைவாசி மேலும் உயரும். அதிகரிக்கும் கடன் சுமையோ கடைசியில் திவாலா நிலைக்குத்தான் வழி வகுக்கும். அவ்வாறு நேராதிருக்க, ஒரு குடும்பத் தலைவன் போல நிதி அமைச்சர் செயல்பட்டு, வருவாய்க்கு ஏற்ப செலவைக் கட்டுப்படுத்த வேண்டும்.

மன்மோகன் சிங்கின் மணிபர்ஸில் .''அரசின் டம்பாச்சாரி செலவினங்கள்'' என்ற ஓட்டை விழுந்திருக்கிறது. அதைத் தைத்துச் சீராக்காத வரை, அவரால் தேசப் பொருளாதாரத்தைப் பலப்படுத்த முடியாது.

# வங்கியை வாங்க விருப்பமா?

வங்கியை வாங்கினால் நல்லதுதான்; முடியாதபோது அதில் சில பங்குகளையா வது வாங்கலாமே? இன்று வாங்கி நாளை விற்று லாபம் காணவேண்டும் என்ற சூதாட்ட மனப்பான்மை இன்றி, ஓரளவு நீண்ட கால நோக்கில் தங்கள் முதலீட்டின் மதிப்பைப் பெருக்கிக் கொள்ள நினைப் பவர்களுக்குப் பங்கு மார்க்கெட் நன்கு உதவும். பின்வரும் நிறுவனங்கள் பொது மக்களிடம் முதலீடு கோரி அண்மையில் மார்க்கெட்டுக்கு வருகின்றன.

## FEDERAL BANK LTD

தனியார் துறையில் இயங்கும் பெரிய வங்கிகளில் ஒன்று. 31.3.93 முடிய. டெபாஸிட் தொகை ரூ.1718 கோடி. தென்னிந்தியாவில் ஏராளக் கிளைகள் உள்ளன. குறிப்பாகக் கேரளத்தில். கடந்த ஐந்து ஆண்டுகளில் இந்த வங்கியின் டெபாஸிட் தொகை 197% அதிகரித்துள்ளது. லாபம் 890% அதிரித்துள்ளது. இத்தகைய துரித வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணம், உலகெங்கும் உள்ள கேரளக்காரர்கள் தங்கள் சம்பாத்தியத்தை இந்த வங்கி மூலம் இங்கு அனுப்புவது தான் .

சமீபத்தில் ஒரு சுற்றறிக்கையின்படி ரிசர்வ் வங்கி, எல்லா வங்கிகளையுமே தனது மூலதனத்தைப் பெருக்கி பலப்படுத்திக் கொள்ளச் சொல்லியிருக்கிறது. ரிசர்வ் வங்கியின் இந்தத் தாக்கீதைப் பூர்த்தி செய்யும் விதமாக ஃபெடரல் வங்கி ரூ.32 கோடிக்கு மூலதனம் கோருகிறது. இதற்காகப் பத்து ரூபாய்ப் பங்கை ரூ.90க்கு அதாவது ரூ.80 கூடுதல் விலைக்கு வழங்குகிறது. இவ்வங்கிக்கு ஏற்கெனவே 27,946 பங்குதாரர்கள் உள்ளனர்.

பல தனியார் வங்கிகளின் பங்குகள் மார்க்கெட்டில் மிக உயர்ந்த விலைக்குக் கைமாறும் காரணத்தால் இந்த வங்கியின் பங்குகளுடைய மதிப்பும் கணிசமாக உயரும் என்று எதிர்பார்க்கலாம். சிறப்பான முதலீடாகவே இருக்கும்.

## INDBANK MERCHANT BANKING SERVICES LTD

சென்னை, இந்தியன் வங்கியால் தொடங்கப்பட்ட வங்கி இது.

இந்த வங்கி ஏற்கெனவே பங்குகள், டிபெஞ்சர்கள், இதர கடன் பத்திரங்கள் தொடர்பான நடவடிக்கைகள் பலவற்றில் ஈடுபட்டு வருகிறது.

சம்பிரதாயமான வங்கிப் பணிகள் வேறு. மர்செண்ட் பாங்க் பணிகள் வேறு. பின்னது, பங்கு மார்க்கெட் விவகாரங்கள், அயல் நாட்டிலிருந்து வரக் கூடிய பணத்தை நிர்வகிப்பது, நிறுவனங்கள் சார்பில் பங்குகள் தொடர்பான ஆராய்ச்சிகளை நடத்துவது, அவர்கள் வெளியிடக் கூடிய பங்கு பத்திரங்களுக்கு யோசனைகள் கூறி, நிர்வகிப்பது போன்ற காரியங்களில் ஈடுபடுகின்றன.

இந்தியன் வங்கியின் துணை நிறுவனமாக அதன் மர்செண்ட் பாங்க் 15கோடி மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. தற்போது மூலதனத்தைப் பெருக்கிக் கொள்ளவும் மக்களின் பங்கேற்பை அதிகரிக்கச் செய்யவும் எண்ணி, 1,47,10,000 பங்குகள் விநியோகிக்கப்பட உள்ளன. ஒவ்வொரு 10ரூ. பங்கையும் ரூ.15/- கூடுதல் தொகை தந்து ரூ.25க்குப் பெறவேண்டும். இவ்வாறு மொத்தம் 36.02 கோடி திரட்ட உத்தேசம்.

பங்கு மார்க்கெட்டில் இப்போது நடவடிக்கைகள் மிக அதிகமாகிவிட்டன. அதனால் இந்தியன் வங்கியின் மர்செண்ட் வங்கியும் மிகச் சிறப்பாக இயங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதன் பங்குகளுடைய மதிப்பு கணிசமாக உயர வாய்ப்புண்டு. மார்ச் 18 முதல் விண்ணப்பங்கள் பெறப்படும்.

இந்தியன் வங்கியின் சேர்மன் கோபாலகிருஷ்ணன்தான் இந்த இந்த்பாங்க் மர்செண்ட் பாங்குக்கும் சேர்மன்.

## ATLANTIC SPINNING & WEAVING MILLS

ஏற்கெனவே லாபகரமாக இயங்கி வரும் நிறுவனம். பருத்திநூல், செயற்கை பாலியெஸ்டர் நூல், இரண்டும் கலந்த நூல் என்று பலரக இழைகளை உற்பத்தி செய்து வருகிறது. இதன் தயாரிப்புகளுக்கு நல்ல கிராக்கியும் உள்ளது. அதிகரித்து வரும் தேவையைப் பூர்த்தி செய்ய விரிவாக்கத்தில் இறங்குகிறது. இதற்கு ரூ.13.77 கோடி மூலதனம் தேவைப்படும். நிதி நிறுவனங்களும் நிர்வாகிகளும் எடுத்துக் கொள்வதுபோக பொதுமக்களுக்கு 16,72,900 பங்குகள் ரூ.20 கூடுதல் விலையில் ரூ.30க்கு வழங்கப்படுகிறது. நிறுவனத்தின் கடந்தகால சிறப்பான செயலாற்றலைப் பார்க்க, எதிர்காலமும் நன்றாக அமையும் என்று கருதலாம். பயனுள்ள முதலீடாகவே விளங்கும்.

– வி.கோபாலன்

# Kalki Shopping Page

## சலுகை விலையில் வைரத்தோடு

பம்பாய் கட்டிங், சூரத் கட்டிங்,
பெல்ஜியம் கட்டிங் செய்யப்பட்ட
வைரத்தோடு, மூக்குத்தி, மோதிரம்
எந்தவித தோஷமும் இல்லாமல்
கிடைக்கும்.

**"செய்கூலி, சேதாரம்
இல்லாமல் கிடைக்கும்"**

உங்கள் ராசிக்கு ஏற்ற நவரத்தின
கற்கள் சுத்தமாகவும், ஒரிஜினலாகவும்
கிடைக்கும். பழைய தங்க, வைர,
ஜாதிக் கற்கள் பதித்த நகைகள் நல்ல
விலைக்கு வாங்கப்படும்.

(சேமிப்பு சீட்டு மூலம் வைரத்தோடுகள்
சுலபமாக வாங்கலாம்)

## V.S.K. JEWELLERS

Golden Plaza (I Floor),
43, Ranganathan Street,
T. Nagar, Madras - 600 017.

## B. M. SILK SAREES

B. M. சில்க் சாரீஸ்
காஞ்சிபுரம்
பட்டுசேலை
தயாரிப்பாளர் :

5, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.

எங்களின் மாதாந்திர சீட்டு
திட்டத்தில் சேர்ந்து
பயனடையுங்கள்.

குறிப்பு : அனைத்து
பட்டு சேலைகளும்
தறி விலைக்கே கிடைக்கும்.

## வேலை வாய்ப்பு

- நீங்களும்
  ஓவிய ஆசிரியர் ஆகலாம்.
- கொஞ்சம் ஆர்வம்
  கொஞ்சம் முயற்சி போதும்.
- அற்புதமான
  அஞ்சல் வழிப் பயிற்சி.
- நேர்த்தியான நேர்முகப் பயிற்சி.
- கல்வித் தகுதி S.S.L.C, +2 தேர்ச்சி.
- ஒளிமயமான எதிர்காலம்.
- உன்னதமான வேலை வாய்ப்பு.
- விவரப் புத்தகம் இலவசம்

விண்ணப்பிக்கவும்

## Ajantha School of Arts

(Govt. Regd. No: 1075/89/MS/RD)
67, Anjaneyar Koil Street,
Poonamallee,
MADRAS-600 056.

உலகப் புகழ் பரத கலைக்கு
உயரிய முறையில் உடைகள் அமைக்க

T.V.S. Mani
DESIGNER &
DRESS MAKER

Specialists in
DANCE
COSTUMES



## Shanthi TAILORS

6, Kapaleeswarar Sannathi Street,
Mylapore, Madras - 600 004.
Phone : 73783

# Kalki Shopping Page



## ராமகிருஷ்ணா ஸ்வீட்ஸ்

அன்புடையீர்,

எங்களிடம் உயர்தர ஸ்வீட்ஸ், கார வகைகள் அனைத்தும் சுத்தமாகவும், சுவையாகவும் தயார் செய்கிறோம்.

திருமணம், பண்டிகை மற்றும் சுப தினங்களுக்கும் தங்கள் ஆர்டரின் பேரில் குறித்த நேரத்தில் சப்ளை செய்கிறோம்.

தங்கள் ஆதரவை என்றும் விரும்பும் :

**ராமகிருஷ்ணா ஸ்வீட்ஸ்**

A-D 3/1, 2வது அவின்யூ,
புளூ ஸ்டார்,
அண்ணா நகர்,
சென்னை - 40.

---

## தரமிக்க ராணி சாரீஸ்

**RANISAREES**
**MADURAI-12**
**R.A.M.**

இந்த துணி லேபிலை பார்த்து வாங்குங்கள்.
மற்றவை நமது தயாரிப்பு அல்ல

கிடைக்குமிடம் :

**மதுரை டெக்ஸ்டைல்ஸ்**

2, சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டி பஜார், சென்னை - 600 017.

---

## ஹாக்கின்ஸ் குடும்பம் பாதுகாப்பான குடும்பம்




விவரங்களுக்கு அணுகவும் :

**KUMARAN ENTERPRISES**

HAWKINS AUTHORISED
SERVICE CENTRE
AND WHOLESALE DEALER
Associate concern
RAJA METAL STORES

264, Purasawalkam High Road,
Madras - 600 007.
Ph : 6421739

---

## SRI MALATHI JEWELLERY

Specially Created
To suit your
Discreminating Taste

Join our Jewel
Savings Scheme
Attractive gift



22ct Gold
Silver and
Diamond

**SRI MALATHI JEWELLERY**

110, Usman Road,
Madras - 600 017.
Ph : 8267493

# Kalki Shopping Page




# கூரை மீது ஏறிக் கூவலாம் கூரியர் வளர்ச்சி!

ஒரு லட்சம் ரூபாய்க்கு ஒரு டிமாண்ட் டிராப்ட்டை, சென்னையிலிருந்து டெல்லிக்கு அனுப்ப, தபால் துறையினை நம்பினால், என்ன வாகும்? நிச்சயம் ஒரு வாரமாகும், போய்ச் சேருவதற்கு. ஒரு லட்ச ரூபாய்க்கு ஒரு வாரத்துக்கு வட்டி எவ்வளவு? - இதுதான் கூரியர் கம்பெனிகளின் வளர்ச்சிக்கு அடிப் படைக் காரணம்.

''உங்கள் டாகுமெண்ட்களை எங்களிடம் கொடுங்கள். தாமதமின்றி, சீக்கிரமாய் உரியவரிடம் கொண்டு போய்ச் சேர்க்கிறோம். என்று கூறிக் கொண்டு சிலர் புறப்பட்டனர், தபால் துறைக்குப் போட்டியாக. இப்படித் தான் தோன்றின கூரியர் கம்பெனிகள்.

''கவர்ச்சிகரமான பெயர்களில், ஏராளமான கூரியர் கம்பெனிகள் இன்று இயங்கி வந்தாலும், பெரும் பாலானவை, எல்லா ஊர்களிலும் ஆபீஸ் கொண்டவை இல்லை. ஆங்காங்கே, தமக்கு ஏஜெண்டுகளை நியமித்துக் கொண்டு, ஒப்பந்த அடிப் படையில்தான் செயல்பட்டு வருகின்றன!'' என்று கூறுகிறார் ராமசந்தர். இவர் ஃப்ரெஞ்ச் எக்ஸ்பிரஸ் என்ற கூரியர் கம்பெனியின் சென்னை ஏஜெண்டாகப் பணிபுரியும் ராகேஷ் சர்வீஸில் பொறுப் பான பதவி வகிப்பவர்.

''எங்கள் நிறுவனத்துக்குக் கிளைகள் இல்லாத ஊர்களில், டெலிவரி செய்ய வேண்டிய டாகுமெண்ட்கள் என்றால், நாங்கள் தவிர்ப்பதில்லை. வாங்கிக் கொண்டு, வேறு கம்பெனிகள் மூலம் சேர்ப் பித்து விடுவோம்'' என் கிறார்.




* பூகம்ப நிவாரணப் பணியில் கூரியர்....

இன்று நானூறு கோடி மதிப்புள்ள பிசினஸ், இந்தியாவின் சுமார் ஐந்நூறு கூரியர் கம்பெனிகளுக்குக் கிடைத்திருக்கின்றது. இத்துறை ஆண்டுக்கு 35 சதவீதம் என்ற கணக்கில் அபரிமிதமாய் வளர்ச்சி கண்டு கொண்டிருக்கிறது என்கிறது ஒரு சர்வே கணிப்பு.

''வேலை வாய்ப்பு என்ற கோணத்தில் பார்த்தால் கூரியர் கம்பெனிகளின் பணி அசத்தலானது. இன்னும் பல மடங்கு பெருகவும் வாய்ப்பு இருப்பதை மறுக்க முடியாது'' என்கிறார் பகுதிநேரமாய் கூரியர் கம்பெனியில் பணிபுரியும் ரங்கனாதன்.



* நாடு விட்டு நாடு போகக்........



* ......காத்திருக்கின்றன.



கூரியர் கம்பெனிகள் மூலம் நாம் எதை எதையெல்லாம் அனுப்பலாம்? தஸ்தாவேஜுகள், அறிக்கைகள், டெண்டர் டாகுமெண்ட்கள், வியாபார சாம்பிள்கள், காசோலைகள், டிராப்ட்கள் போன்றவை.

எதையெல்லாம் அனுப்பக் கூடாது என்ற மிக நீண்ட பட்டியலில் இடம்பெறும் சில இதோ: பணம் ,நகைகள், தங்கம், கடிகாரங்கள், விலையுயர்ந்த பரிசுப் பொருட்கள், ரசாயன திரவங்கள், எலெக்ட்ரானிக் பொருட்கள்...

பலருக்கும் தெரியாத இன்னொரு விஷயம், கூரியர் கம்பெனிகள் மூலம் சொந்தக் கடிதங்களை அனுப்ப சட்டப்படி முடியாது. அதனால்தான், கூரியர் கம்பெனிகள் டெலிவரி செய்யும் கவர்கள் மீதுள்ள ஸ்லிப்களில் இதனுள் கடிதம் ஏதுமில்லை என்று குறிப்பிடப் படுகிறது.

கூரியர் கம்பெனிகளின் வளர்ச்சியைக் கண்டு, இந்திய தபால் துறை சுறுசுறுப் படைந்ததன் விளைவுதான் ஸ்பீட் போஸ்ட் என்னும் துரித அஞ்சல் சேவை.

உள்நாட்டுக் கட்டணங்களைப் பொறுத்துவரை, இப்போது ஸ்பீடு போஸ்ட் ரேட்டை விடக் குறைந்த கட்டணத்துக்கு கூரியர் கம்பெனிகள் சிலர் பணியாற்றுகிறார்கள். ஆனால் அயல் நாட்டுக் கடிதங்

●● *1986ல் மிஸ் சிங்கப்பூர் அழகியான ஃபாரா லாங்கே, பனாமாவில் நடந்த உலக அழகிப் போட்டிக்குச் சென்ற சமயம், போட்டியின் போது அணிந்து கொள்வதற்காகத் தைத்த தன் உடையை வீட்டிலேயே மறந்து வைத்து விட்டு வந்துவிட்டார். உடனடியாய் ஒரு கூரியர் கம்பெனியின் உதவியை அவர் நாட, மறுநாளே உடை வந்து சேர்ந்தது. அதை அணிந்து கொண்டு, போட்டியில் பங்கேற்ற ஃபாரா, உலக அழகியாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.*



## சேவைக்கு சேவை, லாபத்துக்கு லாபம்!

ஓய்வு பெற்ற தபால் துறை அதிகாரி கிருஷ்ணமூர்த்தியின் மேற்பார்வையில், Mass mailing Centre நடத்தி வரும் அவர் மகள் சுஜாதா சொல்கிறார்: ''ஆயிரம் கடிதங்களுக்கு மேலே இருந்தால், பின்கோடு என் வாரியாய்ப் பிரித்து, தனித்தனியேதான் தபால் ஆபீசில் தரவேண்டும் என்று சட்டம் இருக்கிறது. அதைத்தான் நாங்கள் செய்து தபாலாபீஸின் பணியைச் சுலபமாக்கிக் கொண்டிருக்கிறோம். பங்குதாரர்களுக்கான டிவிடெண்ட் காசோலைகள் போன்று ஒரு குறிப்பிட்ட சமயத்தில், கம்பெனிகளால் பல்லாயிரம் விலாச தாரர்களுக்குத் தபால்கள் அனுப்பப்பட வேண்டியிருக்கும். அப்போது, காசோலைகளை உறைக்குள் போட்டு, விலாசம் ஒட்டி, மூடி, உரிய மதிப்புக்கு ஃபிராங்கிங் மெஷினில், முத்திரை யிட்டு, இட வாரியாய்ப் பிரித்து தனித்தனியே கட்டி, தபால் அலுவலகத்தில் சேர்ப்பதுவரை அனைத்துப் பணிகளையும் நாங்கள் செய்கிறோம். தபால் பிரிப்பதில் பல்லாண்டு அனுபவமுள்ள ஓய்வு பெற்ற தபால் துறை ஊழியர்களின் சேவையை நாங்கள் பயன்படுத்திக் கொள்ளுகிறோம். தபால் கட்டணத்துடன் எங்கள் சேவைக்கென சர்வீஸ் சார்ஜ் சேர்த்து நாங்கள் கம்பெனிகளிடமிருந்து பெற்றுக் கொள்ளுவோம்.

களைப் பொறுத்தவரை, ஸ்பீட் போஸ்ட் கட்டணம் வெகு சகாயம்.

தி.நகர் தலைமை போஸ்ட் ஆபீசின் மக்கள் தொடர்பு இன்ஸ்பெக்டர் ராகவன், ''வங்கிகள், பொதுத்துறை நிறுவனங்கள் மற்றும் தகுதியுள்ள நிறுவனங்கள் வசதிக்காக, 'இப்போது அனுப்புங்கள். பின்னர் பணம் செலுத்தலாம்' என்ற சலுகை அளிக்கப்படுகிறது. நீண்ட கால வாடிக்கையாளர்கள் என்றால் அவரது முகவரிக்கே வந்து அவர்கள் அனுப்பவிருக்கும் தபால்களைப் பெற்றுச் செல்லும் வசதியையும் ஸ்பீடு போஸ்ட் பிரிவு அளித்துள்ளது'' என்கிறார்.

''சென்ற ஆண்டு மட்டும், ஸ்பீட் போஸ்ட் பிரிவுக்கு நாற்பது கோடி ரூபாய் லாபம் கிடைத்துள்ளது. இன்றுள்ள மொத்த பிசினஸில் சுமார் முப்பது சதவீத பிஸனஸ் எங்களுக்குத்தான். மீதியுள்ள பிசினஸ், எல்லா கூரியர் கம்பெனிகளாலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது என்கிறார் ஸ்பீடு போஸ்ட் பிரிவின் உயர் அதிகாரி ஒருவர்.

துரிதசேவை என்று பறைசாற்றிக் கொண்டாலும் கூரியர் கம்பெனிகள் அனைத்துமே, நம்பிக்கைக்குரியவை அல்ல. அனுப்பப்படும் டாகுமெண்ட்களும், பொருட்களும், சரியானபடி போய்ச் சேருவதில்லை என்கிற குற்றச்சாட்டுகளும், கன்ஸ்யூமர் கோர்ட்டுகளுக்கு இழுக்கிற சம்பவங்களும் சமீப காலமாய் அதிகரித்து வருகின்றன.

தனியார் துறைக்கு ஊக்கம் என்ற அரசுக் கொள்கை கூரியர் கம்பெனிகளின் வளர்ச்சிக்கு உதவுவதாக அமைந்தாலும், தபால் துறைக்குப் போட்டி வலுத்து வருவதை அரசு உணர்ந்துள்ளது.

இங்கிலாந்தில், ஒரு பவுண்டு எடைக்குக் குறைந்தவைகளை எடுத்துச் செல்லும் உரிமை தபால் துறைக்கு மட்டுமே உண்டு. அந்த மாதிரி இந்திய தபால் துறைச் சட்டத்திலும் ஒரு மாற்றம் செய்யலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறது அரசு!

– எஸ். சந்திரமௌலி



# நல்ல வாய்ப்பை நழுவ விடலாமா

நீங்கள் ஒரு விருந்திற்குச் சென்றிருக்கிறீர்கள். அங்கு வந்திருக்கும் ஒரு முக்கியமான நபரை உங்களது நண்பர் உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறார்.

அம்மனிதர் உங்களிடம் சகஜமாக இங்கிலீஷில் பேசத்துவங்குகிறார்.

அவரிடம் என்ன பேச வேண்டும் என்பது தெரிந்தும் அதை இங்கிலீஷில் எப்படிப் பேசுவது என்று தெரியாமல், அவர் சொல்வதற்கெல்லாம் Yes, Yes, No, No என்று ஏதாவது சொல்லிச் சமாளிக்க வேண்டிய தர்மசங்கடமான நிலமை ஏற்படுகிறதல்லவா?

இதுபோன்று, ஆங்கிலத்தில் பேச வேண்டிய கட்டாயமான சூழ்நிலைகள் ஏற்படும் போது நமது எண்ணங்களை வெளிப்படுத்த முடியாமல்,

ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயத்தினால், வாயை மூடிக் கொண்டு, தலைகுனிந்து நிற்கும் அவல நிலை தொடர இனியும் அனுமதிக்கலாமா?

உங்களில் பலர் நினைப்பது போல ஆங்கிலம் ஒரு கடினமான மொழி அல்ல. முயற்சியும், முறையான பயிற்சியும் இருந்தால் இம்மொழியை மிகச் சுலபமாகக் கற்றுக்கொண்டு, சரளமாகப் பேசும் ஆற்றலை நிச்சயம் பெற முடியும்.

அடிப்படையிலிருந்து துவங்கி, ஆங்கில இலக்கணத்தைப் படிப்படியாக, எளிய முறையில் சொல்லித் தந்து, தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கம் சிறிதுமின்றி, மடைதிறந்த வெள்ளம் போல் ஆங்கிலத்தில் சகஜமாகப் பேச விவேகானந்தா கல்வி நிலையம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறது.

இரண்டரை லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் சேர்ந்து பயனடைந்துள்ள ஒப்பற்ற பயிற்சி முறை இது!

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில், தபால் மூலம், மிகக் குறைந்த கட்டணத்தில் நீங்களும் இப்பயற்சியினை மேற்கொள்ளலாம் 'நேர்முகப் பயிற்சியும் உண்டு'

உங்களை நாடி வந்துள்ள இந்த நல்ல வாய்ப்பினை நீங்களும் பயன்படுத்திக் கொண்டு தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெறுங்கள்

இன்றே கீழ்க்காணும் முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி. நகர், சென்னை-17.

# ஒரு சினிமாப் பாடலின் பிரசவ வலி

டைரக்டர்: எல்லாம் வந்தாச்சா? டிஸ்கஷனை ஆரம்பிக்கடலாமா?

கவிஞர்: ஆரம்பிக்கலாம் ஸார். அற்புதமான பாடலை எழுதியிருக்கேன். நீங்க ஓகே சொல்ல வேண்டியதுதான் பாக்கி.

இசையமைப்பாளர்: நானும் ரெடி. ட்யூன் போட்டுக் காட்டட்டுமா ஸார்?

டைரக்டர்: கொஞ்சம் இருங்க. கவிஞர் ஸார், எங்கே பாட்டோட முதல் வரியைச் சொல்லுங்க.

கவிஞர்: சத்தியமே வெல்லும். இதான் ஸார் முதல் வரி. பிரமாதமா இருக்கு இல்லே? திடீர்னு ஸ்ட்ரைக் ஆச்சு. அப்படியே மெய் சிலிர்த்துப் போச்சு எனக்கு.

இசை: நல்லாயிருக்கு. பின்னாலே ஹம்மிங் வந்தா இன்னும் நல்லாயிருக்கும். சத்யமே வெல்லும் ஹோய் ஹோய்யா...ஹோய்..ஹோய்யா!

நடிகர்: ஹீரோ மட்டும் பாடறதா இருந்தா அவ்வளவு நல்லா வராது. டூயட்டா மாத்திடுங்க.

கவிஞர்: மாத்திடறேன். 'சத்தியம் வெல்லுமாடி சரஸு?'ன்னு ஹீரோ கேக்கறான். 'பத்தியம் பாக்காதே உரக'-ன்னு ஹீரோயின் சொல்றா.

டைரக்டர்: சத்தியத்துக்கும் பத்தியத்துக்கும் என்ன சம்பந்தம்?

கவிஞர்: அப்பத்தான் எதுகை சரியா வருது.

நடிகர்: சம்பந்தம் இல்லைன்னா பரவாயில்லை. கேக்கறதுக்கு நல்லா இருக்கணும்.

கவிஞர்: பத்தியத்துக்குப் பதிலா பைத்தியம்னு கூட போடலாம். சத்தியத்துக்கும் பைத்தியத்துக்கும் சம்பந்தம் இருக்கு.

இசை: பைத்தியம்னா அரைக்கால் மாத்திரை தூக்கலா இருக்கு. பத்தியம்னே இருக்கட்டும். ட்யூனுக்கு வசதியா இருக்கு.

நடிகர்: எங்கே ட்யூன் போடுங்க பாக்கலாம்.

இசை: தான தான தன்னான தான
தானன
தான தான தன்னான தன்னான தானா

டைரக்டர்: கரெக்ட்..அப்படித்தான் ஒரு பரபரப்பு தெறிக்கணும். க்ளைமாக்ஸுக்கு முன்னாலே இந்தப் பாட்டு வருது. தட் தட் தட தட்டுன்னு தூங்கறவங்களை அடிச்சு எழுப்பற மாதிரி இருந்தா நல்லாயிருக்கும்.

நடிகர்: ஜனங்க க்ளைமாக்ஸை மிஸ் பண்ணிடாதபடி அவங்களை எழுப்பி விட்டுடணும்.

கவிஞர்: அதாவது ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தணும். அதானே?

இசை: அதை இசையிலேயே கொண்டு வர முடியும். சத்...சத்..சத்.. சத்தியம் வெல்லுமாடி சரஸு? பத்... பத்... பத்..பத்தியம் பாக்காம உரக ஹாய்... ஹாய்...ஹாய்... ஹாய்யா. ஹோய்... ஹோய்... ஹோய் ஹோய்யா...

நடிகர்: ரொம்ப நீளமா இருக்கிற மாதிரி தெரியுதே. கொஞ்சம் குறைச்சா பெட்டர்.

கவிஞர்: 'சத்... சத்...சத்.... சாயான்னு ஹீரோ பாடறான். பொத்... பொத்... பொத் போயான்னு ஹீரோயின் பாடறா.

நடிகர்: ஃபண்டாஸ்டிக். நீங்க உண்மையிலேயே பிறவிக் கவிஞர் ஸார். வார்த்தைகள் நடனமாடுது, உங்க கிட்டே. இதெல்லாம் ஒரு கிஃப்ட்தான்.

கவிஞர்: ஒரு கவிஞனுடைய இலக்கிய அறிவை கிஃப்ட்டுன்னு சொல்லிக் கொச்சைப் படுத்தாதீங்க.

நடிகர்: என்ன டைரக்டர் ஸார் ஓகே தானே?

டைரக்டர்: ஓகேதான். பாட்டுலே சாயான்னு ஒரு வார்த்தை வருதே. ஹீரோவை டீக்கடைக்காரனா மாத்திட்டா என்னன்னு யோசிக்கிறேன். பரவாயில்லை, ஸ்டோரி டிஸ்கஷன் போது அதைப் பாத்துக்கலாம். கவிஞர் ஸார், நீங்க அடுத்த வரியைச் சொல்லுங்க.

கவிஞர்: மெத்து மெத்து மெத்திக்கோ
தத்து பித்து பொத்திக்கோ
வித்தையெல்லாம் கத்துக்கோ
மொத்தத்தையும் கத்திக்கோ

**இசை:** அருமையா இருக்கு. ஆனா, அங்கங்கே தமிழ் வார்த்தை வர்ற மாதிரி தெரியுது. இசைக்கு ரொம்ப இடைஞ்சலா இருக்கும். அதை எடுத்துட்டா அருமையான பாடல்.

**கவிஞர்:** அப்புறம் தமிழ்ப் பாட்டுன்னு எப்படித் தெரியும்?

**டைரக்டர்:** தமிழ்ப் படத்திலே வந்தா தமிழ்ப் பாட்டு. ஹிந்திப் படத்திலே வந்தா ஹிந்திப்பாட்டு. இசைக்கு மொழி வித்தியாசம் கிடையாது. இதே படத்தை நான் ஹிந்தி, தெலுங்கு, கன்னடத்திலேயும் எடுக்கப் போறேன். இதே பாட்டை எல்லாப் படத்திலேயும் யூஸ் பண்ணிக்கலாமே. மொழி பெயர்ப்பு வேலை மிச்சம்.

**நடிகர்:** ரிதம் நல்லாயிருக்கு. ஆனா, பாட்டு ஏதோ கொஞ்சம் புரியற மாதிரி இருக்குது. ஜனங்க ஏத்துக்க மாட்டாங்க.

**டைரக்டர் :** யு ஆர் ரைட். புரியற மாதிரி இருக்கிற வார்த்தைகளை மாத்திடலாம்.

**இசை:** ரொமாண்டிக்கா ஹீரோயின் முனகற மாதிரி ஒரு நாலு வார்த்தை சேர்த்தா நல்லாயிருக்கும். ரொமாண்டிக் ட்யூன் ஒண்ணு கம்போஸ் பண்ணியிருக்கேன். அதை இதுலே யூஸ் பண்ணிடறேன்.

**கவிஞர்:** எங்கே ட்யூனைச் சொல்லுங்க?

**இசை:** நான்...நான்...நானா
நீன்...நீன்...நீனா

**கவிஞர்:** ஓ...உம்...ம்ஹூம்
ஆ...அம்...ஆஹூம்.

**டைரக்டர்:** சபாஷ். உடனுக்குடன் வார்த்தைகளைக் கொட்டறதுக்கு உங்களை மாதிரி இன்னொரு கவிஞர் பிறந்துதான் வரணும். தமிழ் என்னமாய் விளையாடுது உங்ககிட்டே! சரி, அடுத்த பாராவைச் சொல்லுங்க. ரொம்ப அருமையா வந்துக்கிட்டிருக்குது.

**நடிகர்:** ஆவேசமா ரெண்டு வரியாவது வரணும். அயோக்கியர்களைத் தட்டிக் கேக்கற மாதிரி. சமுதாயத்தைச் சீர்திருத்தற மாதிரி.

**கவிஞர்:** ஆவேசம் எனக்குப் பாயாசம்
ஆங்காரம் எனக்கு ரீங்காரம்.

**டைரக்டர்:** நல்லாயிருக்கு. இதையே வெச்சுக்கலாம்.

**கவிஞர்:** இது பாட்டு இல்லே ஸார். நான் என்னைப் பத்திச் சொல்லிக்கிட்டேன். பாடலுக்கான வரிகளை இப்ப சொல்றேன் பாருங்க.

'நெருப்புக்கும் வெறுப்பு வரும் தோழா
சூரியனைக் கட்டுத்தள்ள வாடா'. எப்படி?

**டைரக்டர்:** ஆஹா! இந்தப் பாட்டைக் கேட்டா கோழைக்கும் கூட வீரம் வரும்.

**இசை:** நெருப்புக்கு வெறுப்பு வந்தா
ஜிங்கி..ஜிங்கி
சூரியனைச் கட்டுத் தள்ளு பங்கி..பங்கி.

**டைரக்டர்:** இன்னும் கொஞ்சம் ஷார்ட் பண்ணலாமே!



**இசை:** பண்ணிடறேன்.
ஜிங்கி ஜிங்கி ஜிங்கு மாமா
பங்கி..பங்கி பங்கு மாமா.

(விவாதம் முடிந்த பின்)

**டைரக்டர்:** வெரி ஃபைன். மொத்த பாட்டையும் பாடிக் காட்டுங்க பாக்கலாம்.

**இசை:** சத்..சத்..சத்..சாயா
பொத்..பொத்..பொத் போயா
மெத்து மெத்து மெத்து
மொத்தத்தையும் கத்து

ஆயாக் கடை இட்டிலி
அண்ணா நகர் சட்டினி
பொரசவாக்கம் பத்தினி
போலாமா மாட்டினி!
ஓ...ம்..ஓஹூ
ஆ..அம்..ஆஹூ

முனியம்மா மூக்கை நீட்டு
முன்னூறு ரூபா நோட்டு
கண்ணம்மா காதைக் காட்டு
காஞ்சிபுரம் ஜரிகைப் பட்டு
ஜிங்கி ஜிங்கி மாமா
பங்கி பங்கி பாமா

**டைரக்டர்:** எக்ஸலண்ட். படம் வெளியான பிறகு ஊரே இந்தப் பாட்டைப் பாடப் போகுது. இதே பாட்டை சந்தோஷமா ஒரு தடவை சோகமா ஒரு தடவை வெச்சிடுவோம்.

**கவிஞர்:** என்னவோ போங்க, உங்களுக்குப் பிடிச்சா சரி. என்ன பாட்டுன்னே புரிய மாட்டேங்குது.

**இசை:** அதைப் பத்தி கவலைப்படாதீங்க. ஒரு வார்த்தை கூட காதுலே விழாதபடி ம்யூஸிக்லேயே அமுக்கிடறேன்.

# தியாக பூமி

## 43. 'ஜில்லி! ஜில்லி!'

சாரு அன்றிரவு நன்றாய்த் தூங்கவில்லை. இரண்டு மூன்று தடவை விழித்துக் கொண்டு, ''தாத்தா! பொழுது விடிந்துடுத்தோ?'' என்று கேட்டாள்.



உமாவோ இராத்திரி தூங்கவேயில்லையென்று சொல்லலாம். வெகு நேரம் வரையில், குழந்தைக்கு என்னென்ன உடைகள் வாங்குவது, என்னென்ன ஆபரணங்கள் அணிவிப்பது, எந்தப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவது, எப்படி எப்படியெல்லாம் வளர்ப்பது என்ற யோசனையில் ஆழ்ந்திருந்தாள். இரவு சுமார் இரண்டு மணிக்குத் தூங்கினாள். அதிகாலையில் எழுந்திருந்து, பொழுது விடிய இன்னும் எவ்வளவு நேரம் இருக்குமென்று ஜன்னலண்டை வந்து பார்த்தாள். 'சரி, வெள்ளி முளைத்துவிட்டது; இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் பொழுது விடிந்துவிடும். சாருவை அழைத்து வர வண்டி அனுப்ப வேண்டும்' என்று எண்ணினாள்.

சாருவை விட்டு இனிமேல் தன்னால் பிரிந்திருக்க முடியாது என்று உமா தீர்மானித்துக் கொண்டாள். அவளை இனிமேல் தன்னுடன் வைத்துக் கொண்டுதான் வளர்க்க வேண்டும். ஆனால், இந்த எண்ணம் எப்படி நிறைவேறும்? அப்பாவிடம் எல்லாவற்றையும் சொல்லி விடலாமா? அதை நினைத்தால் உமாவுக்குப் பயமாயிருந்தது. தன்னுடைய செய்கைகளை அவர் ஒப்புக் கொள்வாரா? பாவி, பதிதை என்று நிராகரிக்க மாட்டாரா? எப்படியும் ஒன்று நிச்சயம்; தான் யார் என்று தெரிந்தால், உடனே இனிமேலாவது புருஷனுடன் வாழ்ந்திரு என்று தான் உபதேசிப்பார் - முடியாது, முடியாது!

ஆகவே, தான் யார் என்று அப்பாவிடம் தெரிவிக்கும் விஷயம் யோசித்துத்தான் செய்ய வேண்டும். பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போது குழந்தையை மட்டும் அழைத்துக் கொண்டு வந்துவிட வேண்டும். இது எப்படிச் சாத்தியம்? - குழந்தையை நம்முடன் விட்டு வைக்கச் சம்மதிப்பாரா? - ஏன் மாட்டார்? அவருக்கு என்ன பாத்தியதை குழந்தையின் மேல்? - ஆறு வருஷம் வளர்த்தால் குழந்தை அவருடையதாகி விடுமா? - ''இந்த ஐசுவரியத்தையெல்லாம் குழந்தைக்குக்

கொடுக்கிறேன்; என்னோடே இருக்கட்டும்'' என்று சொன்னால், வேண்டாம் என்று சொல்வதற்கு இவர் யார்? - போதும், போதும். என்னை இவர் வளர்த்துப் பாழுங் கிணற்றில் தள்ளினாரே, அது போதும்! சாருவையும் வளர்த்து அப்படித்தானே செய்வார்? - இம்மாதிரியெல்லாம் எண்ணி எண்ணி அவள் உள்ளம் அலைந்து கொண்டிருந்தது.

கடைசியாகப் பொழுது விடிந்தது. வண்டியும் சாவடிக்குப்பத்துக்குப் போயிற்று. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சம்பு சாஸ்திரியும் சாருவும் 'வஸந்த விஹார'த்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

உமா பங்களாவின் வாசலில் காத்திருந்து அவர்களை உள்ளே அழைத்துச் சென்றாள். பங்களா, தோட்டம் எல்லாவற்றையும் சுற்றிக் காட்டினாள். தோட்டத்திலிருந்த புஷ்பச் செடிகள் சாருவின் உள்ளத்தைக் கவர்ந்தன. அந்தச் செடிகளை விட்டு வருவதற்கே சாருவுக்கு மனம் வரவில்லை.

கடைசியாக, பங்களாவின் டிராயிங் ரூமில் வந்து உட்கார்ந்தார்கள்.

சாஸ்திரி உபசாரமாக, ''பங்களாவும் தோட்டமும் ரொம்ப அழகாயிருக்கு. மயன் மாளிகையிலே துரியோதனன் தரையை ஜலமென்றும், ஜலத்தைத் தரையென்றும் நினைச்சண்டு திண்டாடினானே, அந்த மாதிரி நானும் திண்டாடிப் போய்ட்டேன்'' என்றார்.

உமா, ''ஆமாம், சாஸ்திரிகளே! இவ்வளவு பெரிய பங்களாவிலே நான் ஒண்டிக்காரி தனியாயிருக்கேன், எவக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்கும், பார்த்துக்குங்கோ!'' என்றாள்.

அதற்குச் சாஸ்திரி, ''உலகமே இப்படித்தான் இருக்கு, அம்மா! சில பேர் இருக்க இடமில்லாமே திண்டாடறா; சில பேர் இருக்கிற இடத்தை என்ன செய்யறதுன்னு தெரியாமே திண்டாடறா'' என்றார்.

உமாவுக்குச் சிரிப்பு வந்தது. அப்பாவினுடைய சுபாவம் பழையபடியேதான் இருக்கிறதென்று எண்ணிக் கொண்டாள். தீண்டாதவர்களுக்கு மாட்டுக் கொட்டகையில் தங்க இடங்கொடுத்துவிட்டு, அப்புறம் திண்டாடினவர்தானே?

''நீங்க சொல்றது ரொம்ப வாஸ்தவம். இந்தக் காலத்திலே வீடு வாசல் வச்சிண்டிருக்கறவா பாடுதான் ரொம்பத் திண்டாட்டமாயிருக்கு. அதனாலேதான் உங்களை ஒரு ஒத்தாசை கேக்கலாம்னு நினைக்கிறேன். ஆனால், நீங்க இஷ்டப்பட்டாத்தான்....''

''எங்கிட்டயா? ஒத்தாசையா? நான் என்னம்மா உங்களுக்கு ஒத்தாசை செய்யப் போகிறேன்?''

''உங்களாலே முடிகிற காரியந்தான் அது. செய்தேள்னா உங்களை என்னிக்கும் மறக்க மாட்டேன்.''



''என்னாலே முடியற காரியமாயிருந்தா, கட்டாயம் செய்யறேன்.''

''வேறே ஒண்ணும் பிரமாதமில்லை. யாராவது ஒரு குழந்தையை எடுத்து வளர்க்கணும்னு எனக்கு ரொம்ப நாளா ஆசை. சாருவைப் பார்த்ததிலிருந்து, அந்த ஆசை ரொம்ப அதிகமாயிருக்கு. சாருவுக்கு அம்மா இல்லேங்கறயள்; எனக்கும் குழந்தையில்லை. ஒரு வேளை நீங்கள் அம்பாள், பராசக்தின்னு சொல்றயளே - அந்த அம்பாள் தான் இப்படிக் கொண்டு விட்டிருக்காளோன்னு கூடத் தோன்றது. நீங்க சம்மதிச்சா, குழந்தையை நானே வச்சண்டு வளர்க்கிறேன்.... என்ன சொல்றேள்?''

அமரர் கல்கி

## அருள்வாக்கு

வாழ்க்கை என்று எதைச் சொல்கிறோம்? சாப்பிடுவது, கல்யாணம் பண்ணிக் கொள்வது, குழந்தை குட்டி பெறுவது, படிப்பது, ஸம்பாதிப்பது, ஊர் ஊராய் ஓடுவது, பாட்டுக் கேட்பது,, ஸினிமா பார்ப்பது, நாவல் படிப்பது என்று இப்படி அநேக கார்யங்களைப் பண்ணுவதைத்தான் வாழ்க்கை என்றும் ஜீவனம் என்றும் சொல்கிறோம். இந்தக் கார்யங்களில் நம்மைச் செலுத்துவதாக அநேக எண்ணங்கள் இருக்கின்றன. இந்த எண்ணங்களையெல்லாம் பிறப்பிப்பது மனஸ். கார்யங்களில் நம் இந்த்ரியங்களை ஏவுவதும் அதுதான். ஆகையால் தனி ஜீவன் என்கிறவனின் ஸாரமாகத் தோன்றுகிற ஜீவனம் என்பதே மனஸை ஸென்டராக வைத்து நடத்தப்படுவதுதான். எண்ணத்தினாலும் கார்யத்தினாலும் உருவாகிற ஜீவனம் என்பது எண்ணமும் கார்யமுமில்லாத ஆத்மாவைக் குறித்ததாக இருக்க முடியாதுதானே?

ஆத்மா மனஸிலே இல்லை என்றால் ஆத்மா வேறே, மனஸ் வேறே. ஆத்மாவுக்கு வேறாக மனஸ் இருக்க வேண்டும். ஆத்மாவுக்கு அந்நியமாக, இரண்டாவதாக, த்விதீயமாக இருப்பதே மனஸ் என்றாகிறது.

நிஜ ஆஸாமி ஒருத்தன், அவன் கல்பனையாகப் போட்டுக் கொள்கிற வேஷம் ஒன்று. இப்போது ஆஸாமியும் வேஷமும் ஒன்றேயா, வேறு வேறா என்றால் எல்லாம் ஒன்றும்தான், வேறு வேறும்தான். விசித்ரமாக, இப்படி முரணான இரண்டாவதாகவும் இருக்கிறது! எவனோ ஒரு ராமஸ்வாமி ராஜபார்ட் போட்டுக் கொள்கிறானென்றால், அவன்தான்

சாஸ்திரி ஸ்தம்பித்துப் போனார். அவர் இம்மாதிரி ஒரு கோரிக்கையை எதிர்பார்க்கவில்லை. அதை மறுத்துச் சொல்லவும் அவருக்குத் தைரியம் வரவில்லை. உமா, "அம்பாள்-பராசக்தி" என்று சொன்னதும், அவருக்கு வேறொரு ஞாபகம் வந்தது: சாரு ஒரு நாள், "பராசக்தி! நல்ல அம்மாவா எனக்கு ஒரு அம்மா கொடுக்கக் கூடாதா?" என்று பிரார்த்தித்தாளே, ஒரு வேளை பராசக்திதான் குழந்தையின் பிரார்த்தனையை இம்மாதிரி நிறைவேற்றுகிறாளோ? - ஆனாலும் முன்பின் தெரியாத பம்பாய்க்காரியிடம் சாருவை விட்டு விட்டுப் போவதா? அது எப்படி முடியும்?

"என்ன சாஸ்திரிகளே? மௌனமாயிருக்கேளே? உங்களுக்குச் சம்மதந்தானே?" என்றாள் உமா.

சாஸ்திரி தயக்கத்துடன், "குழந்தையையே கேட்டுப் பாருங்கோ, அம்மா! அவளுக்கு இஷ்டமானால், எனக்கு ஆட்சேபணையில்லை" என்றார்.

சாரு அப்போது சற்றுத் தூரத்தில் ஜில்லியுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். ஜில்லி தன் முன்னங் கால்களைத் தூக்கித் தலையை அண்ணாந்து பார்த்துக் கொண்டு சாருவின் மேல் ஏறுவதற்கு முயன்று கொண்டிருந்தது. சாரு கலீரென்று சிரித்தாள்.

"பாருங்கோ! இதற்குள்ளே ஜில்லியோடே எவ்வளவு ஸ்நேகமாய்ப் போயிட்டா, குழந்தை! சாரு! இங்கே வா அம்மா!" என்றாள் உமா.

சாரு அருகில் வந்ததும் அவளை எடுத்து அணைத்துக் கொண்டு, "சாரு! உனக்கு என்னைப் பிடிச்சிருக்கா?" என்று கேட்டாள்.

"ஓ எஸ்!" என்றாள் சாரு.

"இந்தப் பங்களாவையும் தோட்டத்தையும் பிடிச்சிருக்கா?" என்று கேட்டாள்.

"ஓ! பேஷாய்ப் பிடிச்சிருக்கு."

"ஜில்லியை?"

"ஜில்லியை ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு."

"அப்படின்னா, நீ இந்த ஆத்திலேயே என்னோடே இருந்துடேன். உனக்கு அம்மா இல்லைன்னு தாத்தா சொல்றா. நான் உனக்கு அம்மாவா இருக்கேன். ஜில்லியோடே விளையாடிண்டு ஜோராயிருக்கலாம்" என்றாள் உமா.

குழந்தை, பாவம், என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் தாத்தாவின் முகத்தைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் குழந்தையின் உள்ளத்தில் இருந்ததைச் சாஸ்திரி தெரிந்து கொண்டார். அவளுக்கு இங்கே இருக்கத்தான் பிரியம்; ஆனால் சொல்வதற்குத் தயங்குகிறாள்.

"நீங்க சொன்னால் குழந்தை இருந்துடுவாள், சாஸ்திரிகளே!" என்றாள் உமா.

சாஸ்திரி கண்ணில் ததும்பிய கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, "அதுக்கென்ன, குழந்தை இருக்கணும்னு பிரியப்பட்டா இருக்கட்டும்" என்றார்.

"தாத்தா சரி என்கிறார். உனக்குச் சம்மதந்தானே, சாரு? அப்புறம் தாத்தாவைப் பார்க்கவே முடியாதேன்னு நினைக்காதே. தாத்தாவுக்கு எப்போ எப்போ இஷ்டமோ அப்போவெல்லாம் வந்து உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்" என்றாள் உமா.

சாரு, "அப்படின்னா சரி" என்று சொல்லிவிட்டு, "ஜில்லி! ஜில்லி!" என்று கூப்பிட்டுக் கொண்டு ஓடினாள்.

அன்று மாலை சம்பு சாஸ்திரி தம்முடைய குடிசையில் அம்பிகையின் விக்கிரகத்துக்கு முன்னால் கைகூப்பிக் கொண்டு நின்றார். அம்பிகை எதிரில் இருப்பதாகவே பாவித்து அவர் பேசும் வழக்கத்தைப் போல் இன்றும் பேசினார்.

"அம்மா! இவ்வளவு கடுஞ் சோதனையா! இந்த உலகத்தில் நான் யார் யார் பேரில் அதிக பாசம் வைக்கிறேனோ அவ்வளவு பேரையும் இழந்துவிட வேணுமா? மீனா - சாவித்திரி - கடைசியில், குழந்தை சாரு - தாயே! இனி என்னால் பொறுக்க முடி



> அந்த ராஜாவேஷம். அவனில்லாமல் வேஷம் இல்லை. அவனையன்றி வேறாக வேஷ ராஜா தனித்து இருக்க முடியாது. இதுதான் அத்வைதம். அப்படியானால் ராமஸ்வாமிதான் ராஜாவா என்றால் அப்படி இல்லை. அந்த ராஜாவின் ராஜ்யம் இவனுக்கு ஸொந்தமா? இல்லை. அவனுடைய பத்னி, புத்ரர்கள் இவனுக்கு ஸொந்தமா? இல்லை. ராஜா என்னவெல்லாமோ கஷ்டப்பட்டானே, ஸுகப் பட்டானே! வேட்டையாடினான்; சூதாடினான்; தோற்றுப் போனான்; அப்புறம் யுத்தத்தில் ஜயித்தான்; ஒரு ஸமயம் துக்கத்தில் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டான்; இன்னொரு ஸமயத்தில் ஆனந்தத்தில் ராகமாலிகை பாடினான் - இந்த அநுபவம் எதுவாவது நிஜ ராமஸ்வாமியுடையவை ஆகுமோ? இதிலே ராஜாவுக்கு ஏற்பட்ட லாப நஷ்டம் ஏதாவது ராமஸ்வாமிக்கு உண்டானதாகுமா? வேஷத்தைக் கலைத்த போது ராமஸ்வாமி கொஞ்சமாவது குறைந்து போகாமல் பழைய ராமஸ்வாமியாக அப்படியேதானே இருந்தான்? அப்போது, நிஜ ஆஸாமிக்கு வேஷம் முற்றிலும் வேறான- த்விதீயமான- விஷயமாகத் தானே ஆகிறது? இப்படித்தான் ஆத்மாவுக்கு மனஸு வேறாவதும்.
>
> - ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

யாது!'' என்று கூறிவிட்டு விம்மினார்.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம் அவருடைய முகம் சிறிது பிரகாசம் அடைந்தது. ''இது என்ன பைத்தியம்? - தாயே! நீ கொடுத்தாய்; நீ எடுத்துக் கொண்டாய். நான் ஏன் வருத்தப் பட வேண்டும்? அந்தக் குழந்தைக்கு வருகிற பாக்கியத்தை தடுப்பதற்கு நான் யார்?'' என்றார். இப்படிச் சொன்ன போது அவருக்கு மறுபடியும் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. கண்ணில் தாரை தாரையாய் ஜலம் பெருகி வழிந்தது.

அந்தச் சமயத்தில் வீதியில் கொஞ்ச தூரத்தில் சிலர் பஜனை செய்து கொண்டு வரும் சப்தம் கேட்டது. அது தேசிய பஜனை.

''தாயின் மணிக்கொடி பாரீர் -
அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட -
வாரீர்!''

என்று தொண்டர்கள் பாடிக் கொண்டு வந்தார்கள்.

இதைக் கேட்ட சம்பு சாஸ்திரிக்கு ரோமம் சிலிர்த்தது. வாசற் பக்கம் சென்று, அந்தப் பஜனை கோஷ்டி மறையும் வரையில் கேட்டுக் கொண்டு நின்றார். திரும்பி அம்பிகையின் விக்கிரகத்தின் முன்னால் வந்து, ''அம்பிகே! இதுவா உன் ஆக்ஞை? இந்தத் துர்ப்பலமான சரீரத்தைத் தேச சேவையில் ஈடுபடச் சொல்கிறாயோ? உன் கருணையே கருணை!'' என்று சொல்லி நமஸ்கரித்தார்.

## 44. சங்கம் ஒலித்தது!

அந்த வருஷத்தில் பாரத நாட்டில் ஒரு யுகப் புரட்சி நடந்து கொண்டிருந்தது. ஆயிரம் வருஷங்களாக அறியாமையில் மூழ்கி, சோம்பலுக்கு ஆளாகி, வீரமிழந்து, அடிமைத்தனத்தில் ஆழ்ந்திருந்த பாரத மக்கள் விழித்தெழுந்து கொண்டிருந்தார்கள். காந்தி மகானுடைய அஹிம்சா மந்திரத்தின் சக்தியால் அவர்களை மூடியிருந்த மாயை ஒரு நொடியில் பனிச்சென்று விலகிப் போனது போல் இருந்தது. அவர்களைப் பிடித்திருந்த அடிமைத்தளைகள் படீர் படீர் என்று முறிந்து விழும் சப்தம் நாலு பக்கங்களிலும் எழுந்தது.

''வீர சுதந்திரம் வேண்டி நின்றார் -
பின்னர்
வேறொன்று கொள்வாரோ?''

என்னும் ஆவேசம் தேசமெங்கும் உண்டாயிற்று. நாட்டின் விடுதலைக்காக ஜனங்கள் எந்த விதமான கஷ்டங்களையும் அநுபவிக்கவும், எவ்விதத் தியாகங்களையும் செய்யவும் தயாரானார்கள். தேசப்பணியில் உடல் பொருள் ஆவியைத் தத்தம் செய்வதற்கும் சித்தமானார்கள்.

அன்னையின் கைவிலங்குகளைத் தகர்க்க முயன்றவர்கள் அதே சமயத்தில் தங்களைப் பிணைத்திருந்த தளைகளையும் அறுத்தெறிந்தார்கள். உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்று மடமை தகர்ந்தது. '' எல்லோரும் ஓரினம், எல்லாரும் இந்திய மக்கள்'' என்னும் உணர்ச்சி பரவிற்று.

ஒரு தன்னந் தனி மனுஷர்-தள்ளாத கிழவர் - கையில் கோல் ஊன்றி - ''சத்தியமே ஜயம்'' என்று சொல்லிக் கொண்டு சுதந்திர யாத்திரை தொடங்கினார். அவரைப் பின்பற்றி அந்தப் புண்ணிய வருஷத்தில் பாரத மக்கள் ஆயிரம், பதினாயிரம் லட்சம் என்ற கணக்கில்,

''கத்தியின்றி ரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை நம்பும்
யாரும் சேருவீர்.''

என்று பாடிக் கொண்டு கிளம்பினார்கள்.

இத்தகைய சுதந்திர சங்கநாதத்தின் ஒலி சாவடிக்குப்பத்துக்கும் வந்து எட்டித்தான் இருந்தது. சம்பு சாஸ்திரிக்குச் சில காலமாக மனத்தில் அமைதி கிடையாது. 'தேசத்தில் இப்படிப்பட்ட மகத்தான இயக்கம் நடக்கின்றது. என்னவெல்லாமோ ஆச்சரியங்

கள், கனவிலும் எதிர்பாராத அற்புதங்கள் நிகழ்கின்றன. - நாம் மட்டும் இந்தச் சாவடிக் குப்பத்தில் உட்கார்ந்து பொழுது போக்கிக் கொண்டிருக்கிறோமே?' என்ற தாபம் அவர் மனத்தில் அடிக்கடி உண்டாகும். அப்போ தெல்லாம், 'முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டதுபோல் இந்த ஆசையெல் லாம் நமக்கு எதற்கு? எவ்வளவோ பெரிய மகான்கள், வீர புருஷர்களெல்லாம் சேர்ந்து செய்யும் காரியத்தில் நாம் ஈடுபட்டு என்ன செய்துவிடப் போகிறோம்? நம்மால் என்ன முடியும்? ஏதோ இந்தச் சாவடிக்குப்பத்து ஜனங்களுக்கு நம்மாலான ஊழியம் செய்து கொண்டிருந்தால், அதுவே பெரிய காரியம்' என்று எண்ணி மனதைச் சமாதானப் படுத்திக் கொள்வார்.

இந்த மாதிரி சம்பு சாஸ்திரி நினைத்த தற்கு அவருடைய இருதய அந்தரங்கத்தில் குழந்தை சாருவினிடம் கொண்டிருந்த அள விலாத அபிமானமும் ஒரு முக்கிய காரண மாகும். ஒவ்வொரு சமயம் அவர் இது விஷ யமாகத் தம்மைத் தாமே நிந்தித்துக் கொள் வதுமுண்டு. 'என்ன? உன்னை நீயே ஏமாற் றிக் கொள்ளவா பார்க்கிறாய்? உன்னை விடப் பலவீனர்கள் எத்தனையோ பேர் தேச சேவை செய்யவில்லையா? சிறைக்குப் போகவில்லையா? உயிரையும் கொடுக்க வில்லையா? உனக்கு மட்டும் என்ன வந் தது? இந்தக் குழந்தை மேலுள்ள பாசத் தினால்தானே நீ வெளியே கிளம்பாமல், தேசப் பணியில் ஈடுபடாமல் உட்கார்ந்திருக் கிறாய்?' என்று அவருடைய ஒரு மனஸு சொல்லும். உடனே இன்னொரு மனஸு, ''ஆமாம்; அதனால் என்ன? இந்தக் குழந் தையைப் பராசக்தி என்னிடம் ஒப்புவித் தாள். அந்தப் பொறுப்பை நான் எப்படித் தட்டிக் கழிக்க முடியும்? 'ஸ்வதர்மந்தான் செய்வதற்குரியது; பரதர்மம் விநாசத்தை அளிக்கும்' என்று கீதாசாரியன் சொல்லி யிருக்கவில்லையா?'' என்று தேறுதல் கூறும்.

இந்த மாதிரி சாஸ்திரியின் உள்ளத்தில் போராட்டம் நடந்து கொண்டிருந்த காலத் தில்தான் சென்ற அத்தியாயங்களில் கூறிய நிகழ்ச்சிகள் நடந்தன. ஆகவே, சாருவை உமா ராணி வளர்ப்பதாக ஏற்றுக் கொண்டது பராசக்தியின் விருப்பத்தினாலே என்று சாஸ்திரி தீர்மானித்தார். ஆக்ஞாபித்திருப்ப தாகவும் அவர் நம்பினார். ஊர் ஊராகப் போய்த் தேச யாத்திரை செய்ய வேண்டு மென்பதாக அவர் மனத்தில் நெடுங்கால மாகக் குடி கொண்டிருந்த ஆசையும் இப் போது நிறைவேறக் கூடியதாயிற்று.

எனவே, சாவடிக் குப்பத்திலிருந்து கிளம்புவதென்று சாஸ்திரி முடிவு செய்து கொண்டார். ஆனால், இதை நல்லா னிடமும் மற்றவர்களிடமும் எப்படித் தெரி விப்பது? தெரிவித்தால், அவர்கள் கட்டா யம் ஆட்சேபிப்பார்களே?

இம்மாதிரி யோசித்துக் கொண்டு ஒரு நாள் குடிசையின் திண்ணையில் உட்கார்ந் திருந்த போது, குப்பத்தைச் சேர்ந்த பெண் குழந்தைகள் சிலர் அங்கே வந்தார்கள். சாஸ்திரியார் திண்ணையில் உட்கார்ந்திருப் பதைப் பார்த்ததும் அவர்கள் அவர் அருகில் வந்து நின்றார்கள்.

''என்ன காந்திமதி! எங்கே வந்தீங்க எல்லாரும்?'' என்று சாஸ்திரி கேட்டார்.

''ஏன், சாமி! சாரு இனிமே இங்கே வரவே வராதுங்களா?'' என்றாள் காந்திமதி.

''சாரு இனிமே வரமாட்டாள், அம்மா! அவள் இப்போது பெரிய பணக்காரியாய்ப் போய்விட்டாள். இனிமேல், நம்மையெல் லாம் கவனிக்க மாட்டாள்'' என்றார் சாஸ்திரி.

உமாராணி அன்று, ''என்னோடே இருக்கயா?'' என்று கேட்டதும், சாரு அதற்குச் சம்மதித்து விட்டது சாஸ்திரியின் மனத்தைப் புண்ணாக்கியிருந்தது. இந்த வருத்தத்தைத்தான் மேற்கண்ட வார்த்தை களில் அவர் தெரிவித்தார். ஆனால், உடனே, 'சீ! குழந்தையைப் பற்றி என்ன சொல் கிறோம்? அவளுக்கு என்ன தெரியும்! பாவம்!' என்று எண்ணினார்.

அந்தப் பெண்களில் இன்னொருத்தி, ''ஏங்க? சாரு இப்போ போயிருக்கிற இடத் திலே சோறே சாப்பிட மாட்டாங்களாம்; ரூபாயைச் சமைக்கச் சாப்பிடுவாங்களாமே; அது நிஜங்களா?'' என்று கேட்டாள்.

சாஸ்திரி, ''அப்படி யார் சொன்னா, உனக்கு? ரூபாயைச் சாப்பிட முடியாது, அம்மா! எவ்வளவு பணக்காரனாயிருந்தா லும் முடியாது. உங்க பள்ளிக்கூடத்திலே, 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' என்று பாட்டுக் கூடச் சொல்லிக் கொடுத் திருப்பாளே; இல்லையா?'' என்றார்.

''அதுதானுங்க கேட்டேன். காளியம்மா தான் அப்படிச் சொன்னா; நான் இருக்கா துன்னேன்'' என்றாள்.

அப்போது, காளியம்மா, ''சாரு இல் லாமே எங்களுக்கெல்லாம் போதே போலிங்க. ரொம்பக் கஷ்டமாயிருக்கு துங்க'' என்றாள்.

''எனக்குக்கூடக் கஷ்டமாய்த்தானம்மா இருக்கு; அதனாலேதான் நான் கூட இந்த ஊரை விட்டே போய் விடலாமென்று யோசிச்சுண்டிருக்கேன்'' என்றார் சாஸ்திரி.

இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு நல்லானும் இன்னும் நாலைந்து பேரும் கும்பலாகச் சாஸ்திரியிடம் வந்தார்கள்.

நல்லான் சிறிது ஆத்திரத்துடனேயே, ''எஜமான், இது என்ன நாங்க கேள்விப் படறது? நீங்க குப்பத்தை விட்டுப் போகப் போறதாச் சொன்னீங்களாமே? பசங்கள் சொல்லிக்கிட்டிருக்குதே! அது நெசந் தானா?'' என்று கேட்டான்.

(தொடரும்)

இன்னும் சரியாய் விடியவில்லை. அஞ்சுமணிக்கே முழிப்புத் தட்டிவிட்டாலும் கண்ணைத் திறக்க பயந்துபோய்க் கிடந்தான் லோகநாதன். உறக்கத்தில் ஒதுங்கி நின்ற கவலைகள், ஓட்டமாய் ஓடிவந்து மாயமாய் அப்பிக்கொண்டன மனசில்.

'ஏலச்சீட்டை இன்னைக்கு எடுத்துர முடியுமா? ரெண்டாயிரத்தைந்நூறு கை வந்து சேருமா? இதுதான் முதலில் வந்த நினைப்பு.கட்டாயம் எடுத்தாக வேண்டும். தலையை அடகு வைத்தாவது சீட்டுத் தொகையைக் கைப்பற்றியாகணும். தப்ப விட்டு விட்டால்...மானம் கப்பலேறிப் போகும்.

'ஏலம் கேட்பதில் எந்தப் படுபாவியாச்சும் போட்டிக்கு வந்துவிட்டால்...?'

இன்றைக்குப் பொழுது எப்படிப்பட்ட பொழுதாய் விடியுமோ என்கிற திகில்.

எதற்கும் கால நேரம் ஒத்துவர வேண்டும். யோகம் இருந்தால் ஆகாயம் கூட அடிமடியில் கிடக்கும். நேர பலன் சரியில்லா விட்டால், முழங்கையில் ஒட்டியிருக்கிற தூசி முன் கைக்கு எட்டாது. ஊ...ம்...

பெருமூச்சு கனத்த சோகமாய் வெளிப்பட்டது. உடுத்திருந்த கைலி ஒதுங்கிக் கிடப்பதை உணர்ந்து ஒழுங்குபடுத்திக் கொண்டான். வீட்டுக்காரி ஓடைக்குப் போயிருப்பாள்.



மேலாண்மை. பொன்னுச்சாமி

பிள்ளைகள் முகத்தை மூடிக் கொண்டு உறங்கும். சுற்றிலும் அரவமற்ற வெறுமை. இன்னும் சரியாய் விடியவில்லை. அஞ்சுமணிக்கே முழிப்புத் தட்டிவிட்டது.

வெளியே-

சோம்பல் முறிக்கிற கொட்டாவிக் கிராமம். பாத்திரங்களைச் சாம்பல் போட்டு மினுக்குகிற சரசரப்பு. பால் பீய்ச்ச பால் சொஸைட்டிக்குப் போகிற எருமைகளின் அசமந்தமான காலடிச் சத்தம். முற்றங்களில் சாணிப் பால் தெளிக்கிற 'சளப், சளப்'. விடுபட்டு வெளிவந்த ஆச்சர்ய மகிழ்ச்சியில் ரெக்கையடித்துச் சடசடக்கிற கோழிகளின் 'கேர், கேர்.' விருட்டென்ற சத்தத்துடன் பறக்கிற கரிச்சான்களின் 'கீச். கீச்'!

சத்தங்களில் வடிவம் காட்டும் வெளி உலகம்.

மூந்தாநாளுக்கு முதல்நாள். நீர்ப்பிடித்துக் கொண்ட மாதிரி கிராமமே அரண்டுபோய் அலறியது. 'சர் புர்'ரென்று ரெண்டு பிளசர்கள், ஒரு ஜீப். புழுதியை கிளப்பிக் கொண்டு ஊருக்குள் பிசாசுகளாய். குமாய்ச் சட்டை போட்ட ஆபீஸர்மார்கள். விவசாய கூட்டுறவு சொஸைட்டிப் புலிகள். நெடு நாள் பசி. வேட்டையாடும் உரிமையோடு வந்திருந்தன. உள்ளூர் சொஸைட்டி செக்ரட்டரி முகத் தாட்சண்யம் பார்க்கிறான். அவனால் தப்பிக்க முடியவில்லை. வசமாக அவர்களிடம் சிக்கிக் கொண்டான். மீள வழியில்லை.

பேரேடும் நோட்டுமாய் ஆபீஸர்மார்களோடு வந்து, சம்சாரிகள் வீடுகளைக் காட்ட வேண்டிய தலையெழுத்து. உளவாளி மாதிரி.

பதினேழு சம்சாரிகள் ஓ.எஃப்கள். அதாவது, பெரிய சம்சாரிகள், கெடுபிடி வசூலுக்குரியவர்கள். அதில் லோகநாதனும் ஒருத்தன்.

ஆபீஸர்மார் 'தாட் பூட்'டென்று தடபுடல் காட்டினார்கள். அவர்கள் பேசிய பேச்சில் பாதி, 'தஸ்ஸ்' இங்கிலீஷ்.

கூட்டமாய்ப் போய் வீட்டு வாசலில் நின்றவுடனேயே... சம்சாரி பருந்தைக் கண்ட கோழிக்குஞ்சாக நடுங்க... பிடிபட்ட குற்றவாளியாய் குன்றிப் போகிறான்.

ஜப்தி செய்யப் போவதாய் ஆபீஸர்கள் அதட்டல் போட... போரில் தோற்ற இலங்கை வேந்தனாய் அவமான அவஸ்தையில் துடித்துப் போகிறான். தேகத்திலிருந்து மானத்தைக் கிழி உரிக்கிற வலி. அவன் கெஞ்சுகிற கெஞ்சுதல்களையெல்லாம் காதில் கூட வாங்கிக் கொள்ளவில்லை, ஆபீஸர்மார்.

''மொத்த லோனில் மூன்றில் ஒரு பங்கை உடனே ரசீது போட்டால்தான் விடுவோம். இல்லேன்னா... ஜப்திதான்'' என்று அடாவடி பண்ணுகிற அதிகாரிகள். கோவணம் பறிகொடுத்தவனாய் சம்சாரி மனம் துடிக்க, பணிவதைத் தவிர வேறு வழியில்லை.

லோகநாதன் பார்த்தான். கலவர நிலவரம். நிலைமை ஏகக் கெடுபிடி. இளக்கம் தட்டுப்படவில்லை. ஈவு இரக்கமில்லை. தப்பிக்க மார்க்கமில்லை.

அவமானமில்லாமல் விலக ஏதாச்சும் செய்தாகணும். என்ன செய்ய? வீட்டு வாசலுக்கு இந்தக் குமாய்ச் சட்டைச் சனியன்களை வரவிடாமல் தடுப்பதுதான் முதல் வேலை. என்ன வழி?

முன் சரண்டர்தான். சரணாகதிதான்.

அடுத்த வீட்டை நோக்கித் தெருவையடைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்த அந்த ஆபீஸர்மார்களை மறித்து நின்றான், லோகநாதன்.

இவன் விவசாய லோன் வாங்கி நாலு வருஷம் ஆகிவிட்டது. மூவாயிரம் ரொக்கம், ஆயிரத்துக்கு உர உப்பு. செக்ரட்டரியிடம் கேட்டான்.

''நம்ம பாக்கி எவ்வளவு இருக்கு?''

''நீங்க ஓ. எஃப்பா?''

''அது என்ன... இழவோ...?''

''உங்க மெம்பர் நம்பர் 176 தானே?''

''யாரு கண்டது?''

''மூணு நோட்டீஸ் மாறி மாறித் தபால்லே வந்துச்சா?''

''ம்.''

''தவணை தவறின வட்டி, தபால் செலவு, அசல் எல்லாம் சேர்த்து... ஏழாயிரத்துச் சொச்சம் இருக்கு...''

''சரி... ரெண்டாயிரத்தைந்நூறுக்கு ரசீது போட்டிருங்க.''

அதிகாரிகள் முகத்தில் ஒரு வெற்றிப் பெருமிதம். ஒருவரை ஒருவர் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிச் சிரித்துக் கொண்டனர். பாய்ச்சல், அலைச்சல் இல்லாமல் வேட்டை கிடைத்தால்... வருகிற குரூரச் சந்தோஷம்.

''அப்ப... ரசீது போட்டுரவா?''

''இப்ப... கையிலே பணமில்லே.''

''பெறகு?''

''நீங்கதான் சொல்லணும்.''

''திங்கட்கிழமை பேங்க்லே நாங்க அகௌண்ட்டைக் கட்டணும். ஞாயித்துக் கிழமைக்குள்ளே செக்ரட்டரிகிட்டே ஒப்படைச்சிருங்க.''

''அப்...படியா?''

''ஏன் தயங்குறீக? ஊடாலே மூணுநாள் கேப் இருக்குல்லே? அதுக்குள்ளே பணத்தைப் பெரட்டிடுங்க.''

''ம்.''

''அப்ப... ரசீது போட்டுரலாமா...?''

''போட்டுருங்க...''

சரி சொல்லிவிட்டான். வீட்டு வாசலில் கூட்டம் கூடி மானத்தை ஏலம் போடுகிற கேவலத்திலிருந்து தப்பிக்க... அது ஒன்றுதான் வழியாகத் தோன்றியது, அப்போது.

மூவாயிரத்தைந்நூறு ரூபாய் சீட்டு ஒன்று கிடக்கிறது. சடங்காகியிருக்கிற மூத்த மகளுக்குக் கம்மல் வாங்குவதற்காகக் கண்ட கனவு, அது.

அதை எடுத்துவிட வேண்டியதுதான். கனவைக் கரியாக்கிவிட்டு, கடனைக் கட்டித் தொலைக்க வேண்டியதுதான்.

தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போய் ஒழியட்டும். சாட்டைக் குச்சியைத் தவிர எதுவும் மிஞ்சாத சம்சாரியிடம், மானம் ஒன்றுதான் மிஞ்சி நிற்கிறது. அதையும் பறிகொடுத்துவிட்டு 'சீப்'படுவதா?

இன்றைக்கு ஏலச்சீட்டு. இடையில் ஏலம் கேட்டு எவனும் போட்டிக்கு வராமல் இருக்க வேண்டுமே. காரியம் கைகூடுமா?

சரியான அருங்கோட்டை. அஞ்சு பைசா கண்ணில் பார்க்க முடியாது. கை மாற்று, கால்மாற்று என்று எவரிடமும் பத்து பைசா கூடப் பெயர்க்க முடியாது. பணம் புரட்ட... ஏலச்சீட்டைத் தவிர வேறு ரூட்டே கிடையாது, லோகநாதனைப் பொறுத்தவரையில்.

இந்த ரூட்டிலும் ஏதாச்சும் கோட்டமாகிவிட்டால்... போச்சு. கதை கந்தலாகிப் போகும். ஏழு ஊர் கேவலம் வந்து வீட்டு வாசலில் விடியும்.

ஆபீஸர்மார் ஏமாந்த கொதிப்பில்... ஏசிப் பேசியே கொன்றுவிடுவார்கள். கட்டாயமாக ஜப்திதான். தட்டுமுட்டுச் சாமான்களை அள்ளி முற்றத்தில் போட்டுப் பட்டியல் போடுவார்கள். இவன் மானம், ஆடி மாசத் தெருத் தூசியாய்ப் பறக்கும்.

நினைத்தால் அடிவயிற்றில் ஏதோ புரளுகிறது. நெஞ்சுக்குள் 'பக், பக்'கென்று பதறி வரு



றேது. அடப் பாதரவே... சம்சாரி பொழப்பு இப்படியா நாறிச் சீரழியணும்? சர்க்காருக்குப் பயந்த பொழப்பு. களவாணிப்பய மாதிரி.

பொதுத் தேர்தல் நடந்தபோது -

வரிசையில் நின்று வோட்டுப் போட்ட ஞாபகம். வெடிகுண்டு வெடிப்பில் சிதறுண்ட தலைவரின் சதைத் துண்டத்தைப் பார்க்க மனக்கொதிப்பில் போட்ட வோட்டு. வோட்டு போட்ட கட்சியே ஜெயித்துவிட்ட மகிழ்ச்சியில் இவன் மனம் துள்ளிய அந்த நாள். வேட்டும் வெடியும் போட்டு வெற்றியைக் கொண்டாடிய இளவட்டங்களின் கும்மாளத்தைப் பார்த்து, மனம் பூரித்து நின்ற அந்த இனிமையான நாள்.

எல்லாம் போச்சு. இப்போது -

அந்த வேட்டு வெடிப்பும், கருமருந்துப் புகைமண்டலமும் இவனது அடிவயிற்றுக்குள் மண்டுவதாய்... ஓர் உணர்வு.

இன்னும் லோகநாதன் கண்ணைத் திறக்கவில்லை. பயம். முழிக்க முதல் மூஞ்சி கிடைக்கணுமே என்கிற திகில். கன்னி கழியாத குமரிப் பெண் முகம் பார்த்தால்... மங்கலம். நினைத்த காரியம் கைகூடிவிடும், கண்டிப்பாய்.

சகல சாமிகளோடு சேர்த்து குலதெய்வத்தையும் மனத்தில் நினைத்துக் கொண்டு கண்ணைத் திறந்தான். செம்புத் தண்ணீரோடு வெளியே வந்தான். தெரு விளக்கு வெளிச்சத்தில் இருட்டு சாகக் கிடந்தது. மூன்று தடவை வாயைக் கொப்பளித்தான். ஒரு கை நீரை முகத்தில் தெளித்துக் கழுவுகிறபோது...

'தக், தக், தக்...'

யாரோ நடந்து வருகிற அரவம். 'திக் திக்'கென்கிற மனம். நிமிர்ந்து பார்த்தான். இவனுக்குள் குப்பென்று பொங்கிப் பீறிட்ட வசவுகளும், வெறுப்பும்.

தெரு விளக்கின் வெளிச்சத்தில் பால் வாங்க 'வேகு வேகு' என்று நடைப்பாய்ச்சலாய் வடிவுத்தாய். தாலியறுத்தவள்.

''இன்னிக்கு... காரியம் ஜெயிஞ்ச மாதிரித்தான்... ச்சே!''



முகத்தைத் துடைத்துவிட்டு டீக்கடை நோக்கி நடந்த லோகநாதனுக்குள் வெறுப்பின் நமைச்சல். குடியே முழுகிப் போன மாதிரியானதோர் உள்பதைப்பு. 'ச்சே! ச்சே' என்று அலுத்துக் கொள்கிற முணுமுணுப்பு.

'மூஞ்சி முகரையைப் பாரு... பால் வாங்கப் போகிறாளாம்? பால் வாங்க வரலேன்னு யார் அழுதா? போறது போறாளே... காலாகாலத்துலே போய்த் தொலைச்சிருக்கக் கூடாது? ஏங்கண்ணுலே தானா படணும்? நாசமாய்ப் போக.'

இன்னிக்கு கதை கந்தல்தான். ஏலச் சீட்டு அம்பேல்தான். எல்லாமே ஏறுக்கு மாறாய்த்தான் அமையும். நாசக்காடுதான்.

செவ்வாய்க்கிழமை வரப் போகிற சொஸைட்டி ஆபீஸர் படையெடுப்பு. ஜீப்பின் உறுமல். குமாய்ச் சட்டைகள். 'காச், மூச்'கள்.

## சர்வாதிகாரம் என்ன செய்யும்?



ஒரு தலைவரின் சர்வாதிகாரத்தால் - வன்முறைச் செயலால் கொள்கை சீர்கெடுமானால் அந்தத் தலைவர் தன்னை மட்டும் அழித்துக் கொள்வதில்லை. தன்னைத் தலைவனாக்கிய அந்தத் தலைவரின் அரசியல் கட்சியையே அழித்து விடுகிறார் என்ற உண்மை எல்லோரும் மறுக்க முடியாத உண்மையாகும்.

- எம். ஜி. ஆர். (நான் கடந்து வந்த அரசியல் பாதை)

தகவல் : டி. எஸ். சீதாராமன்

''பெரீ...ய்ய ரொக்கப் புள்ளி மாதிரிதான். ரசீதைப் போட்டுட்டுக் கையை விரிச்சா... என்ன அர்த்தம்?''

''போட்டதுக்குப் பணம் கட்டலேன்னா... மோசடி செய்ஞ்சதாகப் போலீஸ்லே கம்ப்ளெய்ண்ட் பண்ண வேண்டியது வரும்.''

''ஆமா... அதைத் தவிர வேறு வழியில்லே.''

''உங்களையெல்லாம் ஜெயில்லே போட்டு மப்பைக் கழட்டினாத்தான்... ஒழுங்குக்கு வருவீக.''

ஆள் ஆளுக்கு அதட்டுகிற குமாய்ச் சட்டைகள்.

நினைக்கும்போதே குடலைப் புரட்டுகிற பயம். ஆளைத் தூக்கி வாயில் போட்டு மென்று தீர்க்கிற திகில். வரப் போகிற தோல்வியையும், கேவலத்தையும் உணர்ந்த மிரட்சி.

''நேரமே சரியில்லே. அதான்... விடிஞ்சவுடனே இந்தச் சிறுக்கி மூஞ்சியிலே முழிச்சிருக்கோம். என்னென்ன கேவலம் எப்படியெப்படி வந்து விடியப் போகுதோ...?''

அடிபட்ட பூனைக் குட்டியாய் ஊமை வேதனையில் அவன் மனம் புலம்பிச் சிணுங்கியது.

டீக்கடை. அந்த வைகறையிலும் மந்தையாடுகளாய் அடைந்து கிடக்கிற ஜனம். சளசளக்கிற விவாதச் சத்தம், சந்தைக் கடை மாதிரி. வேறு வேறு விவாதங்கள்.

டங்கல் திட்டம் சம்சாரிகளின் டங்குவாரையே அறுக்கப் போகுது என்று ஒரு பக்கம். மழை பெய்யாமல் போகிற வங்கொடுமைக்கும், பெரிசுகளை மதிக்காத விடலைகளின் கொழுப்புக்கும் உள்ள சம்பந்தம் பற்றி ஒரு பக்கம். 'மகாநதி'யில் சிறுமியின் தூக்கப் புலம்பலில் வருகிற சோக பயங்கரம் பற்றி ஒரு பக்கம்.

டீக்கடையைச் சுற்றி ஒரு விவாதம்.

லோகநாதன் ''ஒரு டீ போடப்பா. அர்ஜெண்ட்'' என்றான். பேச்சுகளைக் கவனித்தான். கவனத்தை இழுக்கிற - திசை நகர்த்துகிற - விவாதங்கள். மனநமைச்சல் மட்டுப்பட்ட மாதிரி தோன்றியது.

டீப்பட்டறையைச் சுற்றி நடந்த விவாதத்தில் டீக்கடைக்காரரும், முப்பது பவுன் நகையை விற்று, மெட்ராஸுக்குப் போய்க் கடை வைத்து வெறுங்கையோடு திரும்பி வந்த ஒருத்தன். வெறுங்கையோடு போய்க் கடையில் சம்பளத்துக்கு இருந்து, சொந்தக் கடையாகி லட்சாதிபதியான ஒருத்தன்.

இவர்கள் கதைகள் வாய்ப் பொருளாகி, டீக்கடைக்காரர் டீயடிக்காமல் பேச்சு மும்முரத்தில் மூழ்கிப் போயிருந்தார். ''யோகத்தை மிஞ்சி ஒண்ணுமில்லேப்பா. மனுச முயற்சியிலே என்ன இருக்கு? வெறுங்குதிதா'' என்கிற டீக்கடைக்காரர்.

லோகநாதனுக்கு இன்னும் டீ வந்து சேரவில்லை. நேரம் ஆக ஆக இவனுள் பற்றிக் கொண்டு வருகிற எரிச்சல். ஒரு டீத் தண்ணிக்கு எம்புட்டு நேரம் காத்திருப்பது? டீயடிக்காமல்... இவருக்கென்ன வெட்டிப் பேச்சு வேண்டிக் கிடக்கிறது?

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். டீ போடுகிற மாதிரி தெரியவில்லை. கர்ரென்று கோபம் வந்தது. வெடித்து விட்டான்.

''டீயடிக்காம வெட்டிப் பேச்சுப் பேசிக்கிட்டு... 'நேரம், யோகம்'னு புலம்பிக்கிட்டிருந்தா... கடை உருப்படுமா? தொழிலை ஒழுங்காப் பாத்தாத்தான் பொழப்பு உருப்படும். பேசாம டீ போடப்பா.''

'சன்'னென்று கோபமாய்ச் சொன்ன லோகநாதனை ஒரு திடுக்கிடலுடன் பார்த்த டீக்கடைக்காரர் பதறிப் போய், ''இந்தா தாரேன்'' என்றார். டீ வந்தது. நாலைந்து மடக்குக் குடித்தான். டீ உள்ளே போய்... ஒரு கதகதப்பின் பரவல். உணர்வுகள் சமனப்பட, தன்னிலைக்கு வந்தான். சட்டென்று அவனுள் ஒரு யோசனை.

டீக்கடைக்காரரை என்ன சொல்லிக் கண்டித்தோம் என்று நினைத்துப் பார்த்தான். அவனுள் வியப்பு.

அவன் கருத்துக்கு விரோதமாய் அவனே... அது எப்படி?

அவன் நம்புகிற 'கால நேரம், யோகம்' என்கிற சிந்தனைக்கு மறுப்பாக அவனிடமிருந்தே... அது எப்படி?

அவனுக்கே புரியாத குழப்பம். தன்னிலைக்கும், தன்னிலை மறந்த மனித நிலைக்குமான முரண்பாடு. மனக்குழறுபடி. நீள்கிற உள்யோசனையின் நீட்சி தாங்காத அயற்சி.

''ச்சே! அந்த வெறுங்கழுதை முகரையிலே முழிச்சது... கொணத்தைக் காட்டிருச்சே. இப்பவே... மனக்குழப்பம், தலைகீழ்க் குழப்பம்.''

முணுமுணுப்போடு ஓடைக்குப் போனான். புஞ்சைக் காடுகளைப் பார்த்தான். கோடைப் பருத்தி முகம் கருங்கி நிறம் மாறிக் கிடந்தது. மிளகாய் மார்ப் படப்பில் ஒரு கரட்டான் (ஓணான்) தலையை ஆட்டி ஆட்டி இவனைப் பரிகசித்தது. விருட்டென்று படப்பில் ஏறி, மஞ்சணத்தி மரத்துக்குத் தாவிக் கீச்சிடுகிற அணிலின் நையாண்டிப் பார்வை.

ஏலச்சீட்டு நடத்துகிற ராஜலிங்க அண்ணாச்சியை லோகு போய்ப் பார்த்தான். நைச்சியமாய் பேசிப் பார்த்தான். அவர் பெரிய விடாக்கண்டன். கழுவிய தண்ணீரில் நழுவுகிற மீன், பிடி கொடாமல் பதில் சொன்னார்.

''வா... சாயங்காலம் பார்ப்போம். ஏலச் சீட்டுலே மத்தவுகளை ஏலம் கேக்கக் கூடாதுன்னு நா எப்படிச் சொல்ல முடியும்? ஒங்கஷ்டமும் புரியுது. பார்ப்போம்'' என்கிறார்.

'போ... நாளாக்க...' என்று தைரியம் சொல்ல மாட்டேன் என்கிறார். நழுவுகிறார். இவனுக்குள் திக்திக். எல்லாம் இன்னிக்கு முழிச்ச மூஞ்சி. தாலியறுத்த சிறுக்கி. வலமிருந்து இடம் பாய்கிற பூனை மாதிரி, கண்ணில் வந்து நின்ற சனியனாய்... வடிவுத்தாய்...

சொளைட்டி ஜீப்பின் உறுமல் சத்தத்தை நினைத்தாலே அடிவயிறு கலங்குகிறது. நெஞ்சுக்குள் ஒரு பகீர்.

''எல்லாம்... நம்ம பொல்லாத நேரம்'' என்று வெறுப்போடு தலையில் அடித்துக் கொண்டான்.

**வ**டிவுத்தாய்க்கு பதினேழு வயசில் கல்யாணம். பத்தொன்பது வயசின் நிறை வில் விதவைக் கோலம். குடிகாரப் புருஷன். பனை மரத்தில் வயிறு முட்டக் கள்ளு குடித்துவிட்டு, சாராயமும் நாலுாறு மில்லி மண்டிவிட்டு சைக்கிளில் தார் ரோட்டில் அலைபாய்ந்து... விழுந்து மூக்கில் ரத்தம் வழியச் செத்துக் கிடந்தான்.

வாழ வேண்டிய வயது வருவதற்கு முன்பே வாழ்க்கை நாசக்காடாகி - தூசிக் காடாகிவிட்டது, அவளுக்கு. ரெண்டு பொட்டைப் பிள்ளைகள். அதை வைத்துக் கொண்டு அவள் படுகிற பாடுகளும், துன்ப மும் கொஞ்சமில்லை. அவள் பரிதாப வாழ்வைப் பார்த்து அனுதாபப்படாத ஆளில்லை, ஊரில்.

வடிவைப் பற்றிய பேச்சு வருகிற



"நாமது நாட்டின் மீது படை எடுத்து வராங்கன்னு நீ சொன்னதுக்கு அரசர் என்ன சொன்னார்?"

" 'அதிரடிப் படையா, அமைதிப் படையா'ன்னு கேட்கிறார்!"

- வி. சி. கிருஷ்ணரத்தினம்

போதெல்லாம்... பெஞ்சாதியிடம் மனக் குறைவோடு பேசுவான், லோகநாதன். அவன் மனம் நிஜமாகவே வருத்தப்படும். மனசராப் புலம்புவான்.

"பாவம் அந்தப் புள்ளை. குருவிக் குஞ்சைப் பிடிக்க, ரோமத்தைப் பறிக்க, ரெக்கையைப் பிய்க்க, ஊசியாலே குத்தி விளையாடுற மாதிரி... காலம் அவளைப் பாடாய்ப் படுத்திப் பாக்குது. இந்தக் கொடுமை... எந்தப் பொண்ணுக்கும் வரவே கூடாது..." என்பான். அதைச் சொல் கிற போது அவன் மனசில் ஒரு கனிவு. என்ன மிருது. சக மனுஷியின் சோகத்தை உணர்ந்து கலங்குகிற மனிதப் பண்பின் உன்னதச் சுகம். இதெல்லாம் முன்பு.

வருஷா வருஷம் வந்த நொடிப்பு. வெள்ளாமை நாசம். கடன் தொல்லைகள். பிக்கல் பிடுங்கலாகிப் போன லௌகீக வாழ்க்கை. மீள முடியாத மனநெருக்கடிகள்.

தாங்காமல் ஜாதகத்தைத் தூக்கிக் கொண்டு ஜோஸ்யரிடம் போனான். நொந்து கிடந்த இவனுக்குள் அவர் சொன்ன தெல்லாம் சத்தியமாய்த் தெரிய... ஓர் ஆறுதல் கிடைக்க...

சாத்திரம் பார்த்தான். நாள் நட்சத்திர நம்பிக்கை. வளர் பிறை, தேய் பிறை பார்த்து விதை எடுத்தான். புதன், வெள்ளி பார்த்து விவசாய வேலைகள். எடுத்ததற்கெல்லாம் சகுனம் பார்த்தான்.

இப்போது... வடிவுத்தாய் ஓர் அமங்க லம். அவ்வளவுதான். வெறும் கழுதை. அதிருஷ்டங்கெட்ட சிறுக்கி. காய்ந்து வறண்ட மனசுக்குள்... வெறுப்பின் வெடிப் புக் கோடுகள், பாளம் பாளமாய். வெடிப் பின் ஆழத்திற்குள் பூரான், தேள், நட்டு வாக்கலிகள்.

**லோ**கநாதனுக்குத் தலைக்குமேல் ஏகப்பட்ட வேலைகள், புஞ்சைக்குப் போக வேண்டும். காடுகளில் காத்துக் கிடக்கிற வேலைகள். அன்றாடப் பணிகளின் ஆத்திர அவசர இழுத்தடிப்புகள், சம்சாரிகளுக்கான சாஸ்வத நச்சரிப்புகள்.

சகலமும் மறந்து போயிற்று.

மதியக் கஞ்சி புஞ்சைக்கே வந்து விட்டது. நிமிரப் பொழுதில்லை. நேரத்துக் கும் உழைப்பு. மதியக் கரண்டு, பம்ப்செட் மோட்டாரின் பச்சை பட்டனைத் தட்டிவிட் டான். சோளப் பயிர் கிறங்கிக் கிடந்தது. தண்ணீர் வாய்க்காலில் பாம்புக் குட்டிகளாக ஊர்ந்து வந்தது, நுரையும், காய்ந்த சருகுகளு மாய்.

ஓடி ஓடிப் பாத்திகளில் நீரைப் பாய்ச்சி னான்.

பொழுது அடைந்துவிட்டது. தொட் டித் தண்ணீரில் குளித்தான். ஈர வேட்டியும் துண்டுமாய் ஊருக்குள் நுழைகிறபோது, தெரு விளக்கு விழித்துக் கொண்டது.

தெருவில் -

யாரோ கூப்பிடுகிற சத்தம், திரும்பிப் பார்த்தால்... ராஜலிங்க அண்ணாச்சி...

"இங்க வாப்பா..."

அவரைப் பார்த்தவுடன் ஏலச்சீட்டு, ஜீப், சொஸைட்டி, செகரட்டரி எல்லாமே குப்பென்று ஞாபகத்தில் வந்தது.

"என்ன அண்ணாச்சி?"

"சீட்டு ஏலம் விட்டாச்சு."

"ஐயய்யோ... விட்டாச்சா?"

"ஆமா... ஒன்னைக் காணலே. ஒனக் காக நானே ஏலம் கேட்டு... ரெண்டாயிரத் தெட்டுநூறுக்கு எடுத்து வைச்சிருக்கேன். வாங்கிக்கிடுறியா?"

அவனுக்குள் கட்டறுந்து பாய்கிற கன்றுக்குட்டியாய் மகிழ்ச்சிப் பெருக்கு. சட்டென்று மனசின் கனம் குறைந்து லேசா

கிப் போன நிம்மதி. சந்தோஷத்தில் சுவாசம் நிறைந்து வெளிவந்தது. ''நல்ல வேளையாப் போச்சு...'' மனசின் ஆழத்திலிருந்து வெடித்துக் கொண்டு பாய்ந்த ஆனந்தக் கூவல்.

தொகையை அவர் எண்ணிக் கொடுத்தார்.

''சரியாயிருக்கான்னு பார்த்துக்க.''

''இருக்கட்டும் அண்ணாச்சி.''

பத்து எட்டு வைத்திருப்பான், லோகநாதன். செக்ரட்டரி எதிரே வந்தான். அவனிடம் பணத்தைக் கொடுத்தான். மிச்சமிருந்த முந்நூறு ரூபாயை மடித்து இடது உள்ளங்கையில் வைத்துக் கொண்டான்.

செக்ரட்டரி முகத்தில் ஒரு பாராட்டுணர்வு. லோகுவைப் பார்த்து மென்மையாகச் சிரித்தான்.

''எங்க மானேஜர் உங்களை ரொம்பப் பாராட்டுனாரு.''

''எதுக்கு?''

''தேடி வந்து ரசீது போட்டதுக்கு.''

''அப்படியா?''

''ஆமா. இப்ப கரெக்ட் டயத்துக்குப் பணத்தைக் குடுத்துட்டீங்க. இது தெரிஞ்சா... மானேஜர் கூடுதலா பாராட்டுவாரு. பல மீட்டிங்குகள்லே கூட இதைப் பத்திப் பேசுவாரு.''

லோகநாதனுக்குக் கிரீடம் வைத்த மாதிரியிருந்தது. அவன் நடந்து செல்கிற பாதையே மல்லிகைப் பூப் பாதையாய்த் தோன்றியது. அவனுக்குள் இறக்கையடிக்கிற மனச்சந்தோஷம். உள்மனம் விசிலடித்தது.

அவன் நடையில் ஒரு விறுவிறுப்பு. மெல்லிய துள்ளல்.

வீட்டுக்குள் நுழைந்தான்.

ஈர வேட்டியைக் கூட காயப் போடாமல், அடுப்பங்கரையிலிருந்த மனைவியிடம் நடந்ததைக் கூறுகிற போது, அவனுள் ததும்புகிற பெருமையும், பூரிப்பும். சொசைட்டி மானேஜர் பாராட்டியதைப் பற்றி உற்சாகப் பெருக்கில் சற்று நீளமாகவே விவரித்தான்.

அவள் முகம் விரிந்து கிடந்தது. முகமெல்லாம் சிரிப்பு. ஒரு குழந்தையைப் போல... அவள் பேச்சில் - கண்ணில் - ஒரு வெளிச்சம். மனவெளிச்சம்.



''கட்சியிலிருந்து உங்களை வெளியேத்திட்டாங்களே... இனிமேல் என்ன பண்ணப் போறீங்க?''

''ஏதாவது ஒரு பத்திரிகையில் 'தொடர்' எழுத வேண்டியதுதான்!''

- ஞா. ஞானமுத்து

புருஷனின் பரவசப் பெருக்கைப் பார்த்துச் சிரித்த அவள், சற்றுக் கேலியாகச் சொன்னாள் :

''அடேயப்பா... காரியம் கைகூடுனதுல ஐயாவுக்கு ஏகக் கொண்டாட்டம் போலிருக்கே?''

''ஆமா... இருக்காதா? நெனைச்சது நடந்துட்டா... ஒரு பூரிப்புதான்.''

''உங்க முகத்துலே ஸ்ரீதேவி சிரிச்சிருக்கா... இன்னைக்கு யார் முகத்துலே முழிச்சீங்களோ... தெரியலே.''

அவள் சாதாரணமாய்ச் சொல்ல... இவனுக்குள் தேள் கொட்டின மாதிரியிருந்தது. மனசுக்குள் வடிவுத்தாயின் சோக பிம்பம். அவளை வைது தீர்த்த வசவுகள்... இழிவுபடுத்தி நினைத்த வார்த்தைகள். மனசுக்குள் காறித் துப்பிய வெறுப்பு...

அவனுக்குள் ஒரு வெட்க உணர்வு. குற்ற உணர்வின் உறுத்தல். வடிவுத்தாயின் அவல வாழ்வை நினைத்துப் பொங்கிப் பெருகிய கருணை உணர்ச்சியின் மழை. அந்த மனித உணர்வின் பெருமழையில் மனசெல்லாம் நிறைந்து ததும்பி... வெடிப்புகள் மாயமாகி... குழைந்து ஒன்றாகி...

லோகநாதன் லௌகீக வாழ்க்கையை வென்ற மனிதனாகியிருந்தான்... எதிர்காலத்தைப் போல.

---

''நீங்க புதுசா எம். பி. யா தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற விஷயத்தை இப்படி பறை சாத்திக்கணுமான்னு அக்கம்பக்கத்துல எல்லாரும் கேட்கிறாங்க...''

''ஏன், என்னாச்சு...?''

''ராத்திரி தூக்கத்துல எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவான்னு உரக்கப் பாடி எல்லாரையும் எழுப்பி விட்டுடறீங்களே!''

- இரா. விஜயகுமார்





# வைரங்கள் ஜொலிக்கும்; தங்கமே ஜெயிக்கும்!

**பெல்ஜியம், ஹாலந்து போன்ற நாடுகளில் கூட அதிகபட்சமாக அறுபது எழுபது பட்டைகள்தான் தீட்டுகிறார்கள். ஆனால், நாம்தான் வேறு யாரும் எட்டிப் பிடிக்க முடியாத அளவுக்கு ஒரு சிறு வைரத்துக்கு நூற்றியெட்டுப் பட்டைகள் தீட்டுகிறோம்!**

எத்தனைதான் தங்க நகைகள் இருந்தாலும் அட்லீஸ்ட் ஒரு வைர மூக்குத்தியாவது இல்லாவிட்டால் அது என்ன வாழ்க்கை என்று அலுத்துக் கொள்கிற பெண்கள் தான் அதிகம். வைரக் கம்மலும் இருந்து விட்டால் பிறவிப் பயனையே அடைந்த சந்தோஷம்தான்!

தங்க நகைகள் தராத ஒரு திருப்தியை இந்த வைரம் மட்டும் எப்படித் தருகிறது? வெளிச்சம் படும்போது பளீரென்று மின்னலடித்து ஒளிரும் தன்மையால்தான் வைரத்துக்கு இத்தனை மதிப்பு. மற்ற கனிமங்களெல்லாம் ஒளியைப் பெறும்போது அதை அப்படியே பரதிபலிக்காமல் ஒளியைச் சிதறடித்து விடும். வைரம் மட்டும்தான் ஒளிச்சிதறல் செய்யாமல் ஒளியை அப்படியே பிரதிபலித்துத் தனது தனித் தன்மையைக் காட்டி, அனைவரையும் மயங்கடித்து விடுகிறது!

ஆயினும் வைரம் மின்ன வேண்டுமானால் அது பட்டை தீட்டப்பட வேண்டும். அப்போது தான் அதன் அதன் உள்முக அகப்

பிரதிபலிப்பின் தன்மை அதிகரிக்கும். தீட்டப்படும் பட்டைகளின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, வைரத்தின் மின்னும் தன்மையும் அதிகரித்துக் கொண்டே போகும்.

இப்படிப் பட்டை தீட்டி, வைரத்தின் பிரகாசத்தையும் மதிப்பையும் அதிகரிப்பதில் உலகிலேயே முன்னணி வகிக்கும் நாடு எது தெரியுமா? சந்தேகமே வேண்டாம்; நமது இந்தியாதான்.





வைரங்களுக்குப் பெயர்போன பெல்ஜியம், ஹாலந்து போன்ற நாடுகளில் கூட அதிக பட்சமாக அறுபது எழுபது பட்டைகள்தான் தீட்டுகிறார்கள். ஆனால், நாம்தான் வேறு யாரும் எட்டிப் பிடிக்க முடியாத அளவுக்கு ஒரு சிறு வைரத்துக்கு நூற்றிப் பெட்டுப் பட்டைகள் தீட்டுகிறோம்! உலகிலுள்ள பல்வேறு நாடுகளும் நம்மிடம்தான் வைரங்களை அனுப்பிப் பட்டை தீட்டிச் செல்கின்றன.

''இது மட்டுமல்ல; வேறு எந்த நாட்டை விடவும் நாம்தான் வைரங்களில் அதிக சேதாரமில்லாமலும் பட்டை தீட்டுகிறோம்!'' என்கிறார் வைரங்களைத் தேர்வு செய்யும் வல்லுனர்களில் ஒருவரான வி.எஸ். மீனாட்சி சுந்தரம்.

அது சரி, வைரங்களைத் தேர்வு செய்வது எப்படி?

''உலகிலுள்ள கனிமங்களிலேயே மிகவும் கடினத்தன்மை வாய்ந்தது வைரம்தான். எனவே, மற்ற உலோகங்களைக் கொண்டு வைரத்தில் கீறலை ஏற்படுத்த முடியாது. உதாரணத்திற்குத் தங்க நகை ஒன்றில் ஒரு குண்டூசியைக் கொண்டு அழுத்திக் கீறிப் பாருங்கள். அதில் உடனே லேசாகக் கீறல் உண்டாகும். வைரத்தில் அப்படி ஒரு போதும் உண்டாகாது. இன்னும் சொல்லப் போனால், வைரத்தை எடுத்துத் தைரியமாகத் தரையிலேயே அழுத்தி உரசிப் பார்க்கலாம். அப்படியும் கீறல் உண்டாகாது. அப்படி உண்டானால் அது நூற்றுக்கு நூறு போலி வைரம்தான் என்று அடித்துச் சொல்லி விடலாம்.

''இரண்டாவதாக, தோஷமுள்ள வைரம் என்று சொல்லப்படுவது. இது, இயற்கையிலேயே வைரத்திலுள்ள குறைபாடு. அதாவது ஒரு கண்ணாடி பேப்பர் வெயிட்டில் இருக்கிற காற்றுக் குமிழிகள் மாதிரி, இயற்கையாகவே வைரத்துக்குள் இருக்கும் சில குறைபாடுகள். இதைத்தான் தோஷம் என்பார்கள். இம்மாதிரி வைரங்கள், வைத்திருப்பவருக்குக் கெடுதலைத் தரும் என்றும் நம்புகிறார்கள். (சாதாரண வைரம் கூட, திருமணமான பெண்கள் அணியும்போது, மகப்பேறு உண்டாகாது என்ற நம்பிக்கையும் இருக்கிறது.)

'' இதை எப்படி வாங்குபவர்கள் கண்டுபிடிக்க முடியும் என்று கேட்கலாம். அது சிரமம்தான். எனவே, வைரம் வாங்கும்போது மிகவும் நம்பகமான கடைகளில்தான் வாங்க வேண்டும். முடிந்தால் வைரம் பற்றித் தெரிந்த வல்லுநர்களிடம் காட்டி, அது சுத்தமான வைரம்தானா என்று பார்த்துக் கொள்வதும் அவசியம்.

''அப்புறம் இன்னொரு விஷயம். அது 'புளு ஜாகர்' என்று சொல்லப்படும் வைரம் பற்றியது. இது தென்னாப்பிரிக்காவில் உள்ள ஒரு வைரச் சுரங்கத்தில் கிடைத்த வைரத்தின் பெயர். அந்தச் சுரங்க வைரங்கள் மட்டும் சிறிது நீலம் கலந்து இருப்பதால் இந்தப் பெயர் பெற்றது. அந்தச் சுரங்கம் 1902-லேயே மூடப்பட்டு விட்டதால் இப்போது புளு ஜாகர் வைரங்கள் கடைகளில் விற்பனைக்கு வருவதில்லை. எனவே அந்தக் காலத்தில் யாராவது வாங்கி வைத்திருந்து இப்போது விற்றால்தான் உண்டே தவிர, மற்றபடி இவ்வகை



''மிசர்லு மார்க்கெட் போயிட்டா நீங்க என்ன செய்வீங்க?''

''தேவையான கறிகாய்களை வாங்கிக்கிட்டு வருவேன்!''

- ஜூனியர் தேஜ்

''உன் மகனுக்குப் பெண் பார்க்க ஆரம்பிச்சாட்டியா?''

''ஆமாம். வீட்டுக்குக் கொசுவத்தி ஏற்றி வைக்க ஒரு மருமகள் வேண்டாமா?''

- எஸ். மோகன்





* மீனாட்சி சுந்தரம்

வைரங்களை யாரும் விற்க வாய்ப்பில்லை. ஆக, யாராவது கடைகளில் 'புளு ஜாகர்' என்று சொல்லி விற்றால் அதை நம்பி ஏமாந்து போய்விடக் கூடாது!'' என்று சொல்லும் மீனாட்சி சுந்தரம் இன்னொன்றையும் அழுத்தமாகச் சொல்கிறார்.

அதுதான் விலை விஷயம். ''தங்கம் மாதிரி, வைரத்திற்கு ஒரு குறிப்பிட்ட விலைதான் என்று யாரும் கறாராக நிர்ணயிப்பது கிடையாது என்பதால், நீங்கள் தைரியமாகக் கடைக்காரர்களிடம் பேரம் பேசலாம். அவர்கள் சொல்கிற விலையை அப்படியே கொடுத்துவிட வேண்டியதில்லை!'' என்கிறார் அவர்.

சரி, வைரங்கள் பின் எப்படித்தான் விலை நிர்ணயம் பெறுகின்றன. லண்டனில் ஆண்டுதோறும் 'Sight and buy' என்று வைரக் கண்காட்சி ஒன்று நடக்கும். உலகெங்கிலுமுள்ள வியாபாரிகள் அங்கு வந்து, வைரங்களைப் பார்த்தவுடன் ஒரு விலை கூறித் தங்களுக்குப் பிடித்ததை எடுத்துக் கொள்வார்கள். அநேகமாக வைரங்களின் விலை இந்த மாதிரிதான் நிர்ணயிக்கப்படுகிறது என்பதால்தான், எல்லா வியாபாரிகளிடமும் ஒரே மாதிரியான கறார் விலை என்பது வைரத்திற்கு இல்லாமல் போகிறது.

தங்கத்துக்குக் கேரட் என்று சொல்வதுபோல் வைரத்துக்கும் 'கேரட்' என்றுதான் சொல்கிறார்கள். கேரட் என்பது தங்கத்தில் அதன் சொக்கத் தன்மையைக் குறிக்கிறது என்றால், வைரத்தில் எடையைக் குறிக்கிறது. ஒரு கேரட் வைரம் என்பது ஒரு கிராமில் ஐந்தில் ஒரு பகுதி எடை கொண்டது. இந்த ஒரு கேரட் வைரத்தைத்தோண்டியெடுப்பதற்காகச் சராசரியாக ஐந்து டன் மண்ணைத் தோண்டியெடுக்க வேண்டியிருக்கிறது என்பது வைரத்தின் மதிப்பை மேலும் உயர்த்துகிறது!

இத்தனை அரிய தன்மை இருந்தும் ஒரு நாட்டின் பொருளாதாரம் தங்கத்தின் அளவை வைத்துத்தான் நிர்ணயிக்கப்படுகிறதே தவிர, வைரத்தை வைத்து இல்லையே, இதற்கு என்ன காரணம்?



* வைர ஆராய்ச்சி

''தங்கத்தை எத்தனை முறை வேண்டுமானாலும் உருக்கி உருக்கிப் புதுப்புது நகைகள் செய்து கொண்டே இருக்கலாம். ஆனால், வைரத்தை அப்படிக் கையாள முடியாது. பத்து கேரட் எடையுள்ள வைரத்தை ஒவ்வொரு கேரட்டாக வெட்டிப் பட்டை தீட்டிவிட்டால் அவ்வளவுதான்; பிறகு அவற்றை மீண்டும் ஒன்றாக்கிப் பத்து கேரட்டாகச் செய்ய முடியாது. அதோடு, ஆண்டுதோறும் தோண்டியெடுக்கப்படும்- குறிப்பாகத் தென்னாப்பிரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும்- அறுபது மில்லியன் கேரட் வைரத்தில் வெறும் இருபத்தைந்து சதம் மட்டும்தான் நகைகள் செய்யப் பயன்படுத்தப்படுகின்றன. மீதியுள்ள எழுபத்தைந்து சதவிகிதம் தொழில் துறைத் தேவைகளுக்குத்தான் பயன்படுத்தப்படுகின்றன. ஆக எப்படி வைரங்களை ஸ்டாக் வைக்க முடியும்? செலவுதானே செய்ய முடியும்! இதுதான் காரணம்!'' என்கிறார் மீனாட்சி சுந்தரம்.

-பிரின்ஸ்

படங்கள் : கோபிநாத்

# பாராட்டு

**கமலா கந்தசாமி**

"**சா**ர் போஸ்ட்!" வாசலில் போஸ்ட் மேனின் குரல். 'என்ன பெரிய தபால்?.. ஏதாவது கதை திரும்பி இருக்கும்!' மனத்தில் சலிப்பு மண்டியது.

"கவிதா... தபால் வந்துருக்கு. வாங்கிட்டு வா..." என்று மனைவியைப் பார்த்துக் கூறிவிட்டு, புதிதாக வாங்கி வந்திருந்த நாவலைப் புரட்ட ஆரம்பித்தார் கதைப்பித்தன்.

தபாலைப் பெற்று வந்த அவர் மனைவி கவிதா, "பிரம்மா பதிப்பகத்துல இருந்து..." என்றபடி ஒரு கவரை நீட்டினாள்.

"எங்கே..கொண்டா..." ஆவலுடன் வாங்கிப் பிரித்தார் கதைப்பித்தன்.

தனது சிறுகதைகளை எல்லாம் தொகுத்து, ஒரு நூலாய் வெளியிட விரும்பிப் பதிப்பகத்திற்கு எழுதியிருந்தார். 'எங்கே பதில் போடப் போகிறார்கள்?' என்ற நினைவில் இருந்த கதைப்பித்தனுக்கு , பதிப்பகத்திலிருந்து தபால் என்றதும் நூலே வெளிவந்த திருப்தி. பளபளக்கும் லெட்டர் பேப்பரில் டைப் செய்யப்பட்ட கடிதத்தை அவசர அவசரமாய்ப் படித்தார். படித்து முடித்ததும் ஆர்வம் எல்லாம் கனவாய்க் கலைந்து போயிற்று. ரூபாய் மூவாயிரம் முன் பணம் தரணுமாம். பிறகு மூவாயிரத்துக்கும் புத்தகமாகத் தருவார்களாம்.

தப்பு பதிப்பகம் மீது இல்லை. அரக சரியாக நூல்கள் வாங்குவது இல்லை மக்களை ஈர்க்கும் சினிமா, டீவி. என்கிற நிலையில் காசு கொடுத்துப் புத்தகம் வாங்கிப் படிக்கிறவர்கள் எத்தனை பேர்?

"என்னங்க விசேஷம்?" ஆவலுடன் கேட்டாள் கவிதா. பதிப்பகம் என்றதும் ராயல்டி வரும்... புடைவை..நகை வாங்கலாம் என்ற கணக்கு அவள் மனத்தில் எட்டிப் பார்த்தது.

மனைவியின் கேள்விக்குப் பதில் கூறாது, பதிப்பகத்தில் இருந்து வந்த கடிதத்தையே அவளிடம் நீட்டினார், கதைப்பித்தன். வாங்கிப் படித்துவிட்டு "இது தானா?" என்று அலட்சியம் கலக்க கடிதத்தை மேஜைமீது போட்டாள் கவிதா.

'மூவாயிரத்தை போஸ்டாபீஸ்ல டெபாசிட் செய்தா... பிறகு பொண்ணு கல்யாணத்துக்கு உதவும்...' மனதில் கவிதா கணக்குப் போட்டாள். 'ச்சே...என்ன எழுதிச் சாதிக்கிறார் இந்த மனுஷன்?' என்று கணவன் மீது கோபம் எழுந்தது. 'அவனவன் அழகாய் நூறுபக்கத்துல க்ரைம் நாவல் எழுதி மூவாயிரம் சம்பாதிக்கிறானுக... அட்டையில் கலர் போட்டோ.. பாப்புலாரிட்டி.. கதைப்பித்தன்னு சொன்னா இங்கே யாருக்குத் தெரியுது?' தன் கணவன் மீது கோபமும் விரக்தியும் எழுந்தது கவிதாவுக்கு.

"கவிதா...."

"ஏவாம், கவிதாவுக்கு என்ன வச்சிருக்கீங்களாம்?"

"உன் வளையலைக் கொடு... அடகு வச்சிட்டுப் பதிப்பகத்திற்கு அனுப்பலாம். அடுத்த மாசம் ஆபீஸ்ல பி.எப்.லோன் போட்டு மீட்டுடலாம்...."

கணவனின் கேள்வியில் ஏற்கெனவே கோபத்தில் கொதித்துப் போய் இருந்த கவிதாவிற்கு, மேலும் எரிச்சல் சேர்ந்தது. கணவனைத் துச்சமாய்.. கேவலமாய் ஓர் அற்பப் புழுவைப் பார்ப்பது போல் பார்த்து... ஓர் ஏளனச் சிரிப்பையும் இதழில் தவழவிட்டபடி கேட்டாள்.

"அப்படி புக் வெளியிடணுன்னு என்ன இருக்கு? உங்க புக் வரலேன்னு எந்த வாசகன் அழறான்?" கவிதாவின் நெருப்புக் கேள்வி கதைப்பித்தனைச் சுட்டுப் பொசுக்கியது. கேள்வியில் கோபத்தோடு உண்மையும் இருப்பது கதைப்பித்தனுக்குப் புரிந்து தான் இருந்தது.

"அது இல்லே கவிதா. முதல்தொகுதி. நாமதான் பணம் கொடுத்து வெளியிடணும். அப்புறம் பேர் வந்துட்டா. பத்து பர்சண்ட் ராயல்டி கிடைக்கும்... நான் நீன்னு பிறகு நம்ம நூலைப் பதிப்பகம் வெளியிடும்..." தன்னையும், அதே சமயம் மனைவியையும் திருப்திப்படுத்துவது போல் கூற ஆரம்பித்

தார் கதைப்பித்தன். 'லட்சிய எழுத்து' என்று கனவு கண்டு...தனது நூலை அச்சில் பார்க்கும் ஆசையும் - தாகமும் அவரை அலைக்கழித்தது.

''ஆமாம்...அப்படியே சாகித்ய அகாடமி பரிசும் வந்துடும். ஏங்க நீங்க? இப்படி



இந்தக் காலத்திலும் பிழைக்கத் தெரியாத ஆளாய் இருக்கீங்களே...'' வார்த்தையால் சுட்டாள் கவிதா!

பொருளாதாரத்தில் மனைவியைத் திருப்திப்படுத்த முடியாத லட்சிய வாதிகளுக்கு, நிதர்சன வாழ்வில் கிடைக்கும் சாபம் இது என்பது கதைப் பித்தனுக்குப் புரிந்தே இருந்ததால், மனைவி மீது அன்பும் இரக்கமும் எழுந்ததே தவிர, அவள்மீது கோபம் எழவில்லை. இன்றைய தேதியில் முன்னணியில் இருக்கும் பல எழுத்தாளர்கள் தங்களது முதல் நூலைத் தங்கள் பணத்தில்தான் வெளியிட்டார்கள் என்பது புரிந்து இருந்ததால் பதிப்பகம் மீது கோபம் வரவில்லை அவருக்கு.

''எதுக்கும் நேரம் வரணும் கவிதா! ஒரு காலத்தில் அங்கீகாரம் கிடைக்காமல் போகாது. சாகித்ய அகாடமி என்ன பெரிய



பெண்ணின் தந்தை : என் கணக்கெடுப்புல இந்தக் கல்யாணத்துக்குக் குறைஞ்சது ஐயா யிரம் பேராவது வருவாங்க!

பெண்ணின் தாய் : அதுக்காக, அதிக மொய்யை எதிர்பார்த்து இப்படி நீங்க கல்யாண மண்டபத்துல பாங்க் கௌண்ட்டர் ஒண்ணு திறந்து வைச்சிருக்கிறது சரியாப் படலீங்க!''

– வேதபுரி எஸ். ரமேஷ்

பரிசு? காலம் கடந்தாலும் பிற்காலத்தில் அங்கீகாரம் கிடைக்காமல் போகாது...''

''சும்மா ரீல் விடாதீங்க... அதுக்கும் அர சியல் வேணும். செல்வாக்கு வேணும்... இப்ப பாருங்க...உங்க ப்ரண்ட் 'உத்தமராஜ்' இப்ப வந்தவர். மாசம் நாலு நாவல் எழுத றார். பன்னிரெண்டாயிரம். எல்லா பதிப்ப கத்திலும் அவர் புக்ஸ் வருது. போட்டோ போட்டு விளம்பரம் தர்றாங்க... அட்டைப் படத்துல படம் போடறாங்க... அதுமாதிரி எழுதத் தெரியுதா? என்னமோ சமூகம்... லட்சியம்னு கதை பண்றீங்களே? இந்த சமூகத்தை நீங்க எழுதித்தான் திருத்திடப் போறீங்களாக்கும்... பேசாம வேலையைப் பாருங்க...''

அதற்கு மேல் 'அந்த மனுஷனுடன்' பேசுவது கூட தப்பு என்று நினைத்த கவிதா, சமையல் அறைக்குள் புகுந்தாள். கணவன் மீது இருந்த கோபத்தையெல்லாம் உள்ளே இருந்த அலுமினியப் பாத்திரத்தில் காட்டி னாள். இதுபோல் பல முறை கோபத்தைக் கண்ட அந்தப் பாத்திரங்கள் மேலும் நெளிய ஆரம்பித்தன.

**க**தைப்பித்தன் யோசிக்க ஆரம்பித் தார். கோபமாய்ச் சொன்னாலும் கவிதா சொன்னதில் நிஜம் இருந்தது. அந்த நிஜத் தின் கசப்பு, அவர் மனத்திலும் நிறைந்தது. மாத நாவல், குடும்ப நாவல் அல்லது குடும்ப மாதநாவல் என்று கொஞ்சம் கொலை... கொஞ்சம் செக்ஸ்.. யார்மீது பழி யைப் போடுவது என்ற சிக்கலைக் கதையில் கலந்து... கடைசி க்ளைமாக்ஸில் யாரோ புதியவனைக் கொண்டு வந்து நான்தான் கொன்றேன் எனக் கூறவைப்பது சுலபம் தான். அதற்கு மூவாயிரம் கிடைக்கிறது.

''காசு..புகழ்...சுலபமா விளம்பரம் கிடைக்குது. ரசிகர் மன்றம் கூட இருக்கு. பெரிய வீடு. கார்கூட வச்சிருக்காங்க... அவங்க வீட்ல டீவி, ஃப்ரிஜ்னு எல்லா வசதி யும் இருக்கு. மூணு ரூபாய்க்கு ஒண்ணாம் தேதி நாவலாய் வந்து.. மறுவாரமே பஸ் ஸ்டாண்டிற்கு 'டைம் பாஸிங் நாவல்... ரூபாய்க்கு இரண்டு' என்று லாட்டரி சீட்டு மாதிரி பசங்கள் கூவிக் கூவி விற்கிற இந்த குப்பைக் கதை கூட.... வார்னிஷ் அட்டையில்... பளபளப்பாக.. முப்பது நாற்பது ரூபாய் விலையில் பதிப்பகத்தில் புத்தகமாகப் போடுகிறார்கள். நம் கதைக்கு நாமே காசு கொடுக்கணும்கிறது அசிங்கம். அபத்தம் என்பதும் கதைப்பித்தனுக்குப் புரிந்தே இருந்தது. இருந்தாலும் கதைகளை நூலாய்ப் பார்க்கும் ஆசை, வெறியாய் மன தில் நிறைந்தது. இதற்காவது பணம் வேண்டுமே!

'என்ன செய்யலாம்?' மனதில் சதா கேள்வி குடைந்தது.

'ஸார்... நல்ல நாவலா ஒண்ணுஎழுபது பக்கத்துக்குக் குறையாம எழுதுங்க..நான் மாத நாவல் இதழில் சொல்லி போடச் சொல்றேன்'என்று எழுத்தாள நண்பர் உத்தமராஜ் போன மாதம் சொன்னது நினைவிற்கு வந்தது.

'ஒரு நாவல் எழுதினால் என்ன?' கேள்வி தீயாகப் பரவியது. யோசிக்காது பேப்பரை எடுத்துக் கொண்டு எழுத ஆரம் பித்தார். ''நீல நிறத்தில் ஒரு கொலை.'' தலைப்பும் வைத்து விட்டார். நீலப்படம் - நடிகை-கொலை.. என்று இஷ்டத்திற்கு ரீல் விட ஆரம்பித்தார். மூன்றே நாளில் நாவல் ரெடி. திருப்பி ஒரு முறை படித்தார். திருப்தி யாய் இருந்தது. நிறைய விரசம் சேர்த்தி ருந்தார். மனச்சாட்சி எட்டிபார்த்து 'நீயுமா?' என புருட்டஸ்-சீசர் டைப்பில் ஒரு கேள்வி யைக் கேட்டது.

'சமூக உணர்வில் இத்தனை கதை எழுதி..... எவன் பாராட்டி விட்டான்?

வங்கி அதிகாரி : நேத்துத்தானே எருமை லோன் வாங்கிக்கிட்டுப் போனீங்க, மறுபடியும் வந்திருக்கீங்களே பெரியவரே, என்ன விஷயம்?

கிராமத்துக்காரர் : நீங்கதானே அதைக் கட்டிட்டு வந்து கேட்டா மறுபடியும் லோன் குடுப் போமுன்னு சொன்னீங்க தம்பி!

- எம். சுதா



எழுதற வாசகன் கூட அட்டைப் படம் வெகு ஜோர்.. என்றுதானே எழுதறான்?' என்ற பதிலைக் கூறி மனச்சாட்சியை அடக்கினார். 'மூவாயிரம் வரட்டும். அதை வைத்து முதல் நூலை வெளியிடுவோம்! மனசைத் திருப்திப் படுத்த முயன்றார். கதைப் பக்கங் களை அடுக்கி, தைத்துக் கவரில் போட்டு எடுத்துக் கொண்டு, உத்தமராஜ் வீடு நோக்கிச் சென்றார்.

புதிதாய் வாங்கியிருந்த வி.சி.ஆரில் படம் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார் உத்தமராஜ்.

''வாங்க ஸார்.. என்ன ரொம்ப பிஸியா.. பார்த்தே ஒருமாசம் ஆச்சு?'' அட்டகாசமாய் வரவேற்றார் நண்பர். மனை வியை அழைத்து...

''சார் வந்திருக்கார் காப்பி கொண்டா..'' என்று கூறிவிட்டு' ''புதுசா வி.சி.ஆர் வாங்கினேன். எப்படி இருக் குன்னு டெஸ்ட் பண்ணினேன்.. பதிப்பகத் திலே இருந்து ராயல்டி வந்துச்சி.. அது தான்...'' என்று வி.சி.ஆர் வாங்கிய கதையை நண்பர் விவரிக்க ஆரம்பித்தார்.

ஏதோ ஒரு டப்பா படத்தின் முக்கல் முனகல் பாடல் காட்சி திரையில் பாடலாய் விரிந்தது. உத்தமராஜ், கையை நாற்காலி பிடியில் தட்டி ரசித்தபடி இருந்தார்.

''டீதானே உங்களுக்குப் பிடிக்கும்? டீ சாப்பிடுங்க''என்றபடி உத்தமராஜின் மனைவி டீ கொண்டு வந்து வைத்துவிட்டு ''ஸார்...சமீபத்துல நீங்க எழுதின 'மனிதர்கள் இன்னும் சாகவில்லை' சிறு கதை படிச்சேன். ரொம்ப நல்லா எழுதி யிருக்கீங்க.. டச்சிங்கான முடிவு... அதுவும் இந்த மதபேதம் சமயத்துல... இப்படி ஒரு கதை அவசியம் வேணும்...'' என்று பாராட் டியதும் மகிழ்ச்சியில்... திளைத்தார் கதைப் பித்தன்.

''ரொம்ப நன்றிம்மா...'' என்றார்.

''பாராட்டுக்கு நன்றியா? நாங்க இல்லே இப்படி கதை எழுதியவருக்கு நன்றி சொல்லணும். எங்க ஸாரும் இருக்காரே.. கொலை..செக்ஸ்ன்னு...கதைன்னா மனசில நிற்கணும். மனசைத் தொடணும். நீங்க நல்லா எழுதறீங்க...'' உத்தமராஜின் மனைவி புகழ்ந்ததும் நெகிழ்ந்து போனார் கதைப்பித்தன்.

'போதும்.. இந்த அங்கீகாரம் போதும்' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டார்.

டீயை சாப்பிட்டுவிட்டு, ''வரட் டுமா?'' என்று விடை பெற்றார் கதைப் பித்தன்.

வரும்போது கொண்டு வந்த 'நீல நிறத் தில் ஒரு கொலை' நாவலை கிழித்துச் சாலை யோரத்துக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டு, தலை நிமிர்ந்து நடக்க ஆரம்பித் தார்.



# சக்கரவர்த்தித் திருமகன்

**ராஜாஜி**

## 71. சண்டைக்கு இழுக்கிறான்

சீதையிடம் விடைபெற்றுக் கொண்டு போன ஹனுமான் வடக்கே சென்று மதில் மேல் உட்கார்ந்து யோசித்தான்.

'சீதைக்குத் தைரியம் ஊட்டவும் ராவணனுக்கும் அவன் அரக்கர் கூட்டத்துக்கும் சரியான பயம் உண்டாக்கி, அவளை எந்த விதத்திலும் துன்பப் படுத்தாமலிருக்கவும் என்ன செய்ய? சும்மா நான் திரும்பி விட்டால் ராவணனுக்கு நான் வந்தது கூடத் தெரியாது. அவன் பாட்டுக்கு முன்போல் கர்வம் கொண்டவனாகவே இருப்பான். நான் ராமனுக்குச் செய்தியைச் சொல்லிச் சேனையுடன் லங்கைக்குத் திரும்பி வரும் வரையில் சீதை க்ஷேமமாக இருக்க வேண்டுமல்லவா? சீதையை ராவணன் துன்புறுத்தாமலிருப்பதற்காக அவன் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்க வேண்டும். அதைச் செய்து விட்டுத்தான் நான் திரும்ப வேண்டும். அரக்கர்களைச் சமாதான முறையில் நல்வழியில் நிற்கச் செய்ய முடியாது. இந்த மூர்க்கனிடம் அளவற்ற செல்வம் இருக்கிறது. இவர்களுக்குள் பேதம் உண்டாக்குவதும் ஆகாத காரியம். சாம தான பேதம் இவை பயனில்லை. மேல் நடக்க வேண்டிய காரியம் கெட்டுப் போகாத அளவில் இவர்கள் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்கி விட்டு நான் போக வேண்டும். அப்படிச் செய்தால் சீதையின் க்ஷேமம் காக்கப்படும். இந்தக் காரியத்தையும் முடித்து விட்டு, வேகமாகத் திரும்புவேன்' என்று நிச்சயித்தான்.

உடனே பெரிய வடிவம் கொண்டு அந்த அழகிய அந்தப்புரப் பூந்தோட்டத்தை நாசம் செய்ய ஆரம்பித்தான். மரங்களைப் படபடவென்று வீழ்த்தித் தள்ளி, கொடிப் பந்தல்களை நாசம் செய்து, வாவிகளையும் செய்குன்றுகளையும் அலங்காரங்களையும் எல்லாவற்றையும் கெடுத்துப் பாழாக்கினான். மிக அழகுடன் விளங்கிய அசோக வனம், தன் அழகை முற்றிலுமிழந்தது. அங்கிருந்த மான்களும் பறவைகளும் பயந்து கூவிக் கொண்டு வெளியேறி விட்டன. ராக்ஷசிகள், தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எழுந்து இதென்னவென்று காரணம் தெரியாமல் திகைத்தார்கள். ஹனுமான் நந்தவனத்தை அழித்து விட்டு மதில் சுவரின் மேல் உட்கார்ந்தான். ராக்ஷசிகள் வானரத்தைப் பார்த்தார்கள். ஹனுமான் வரவரத் தன் உடலைப் பெருக்கிக் கொண்டு பயங்கரமாக வளர்ந்து அவர்கள் இதயம் நடுங்கச் செய்தான். ராவணனிடம் சொல்லச் சிலர் ஓடினார்கள். சிலர் சீதையிடம் போய், ''இந்தப் பெருங் குரங்கு எப்படி வந்தது? இது உனக்குத் தெரிந்தே இருக்க வேண்டும். உன்னிடம் இது ஏதாவது பேசிற்றா? உள்ளபடி சொல், பயப்படாதே!'' என்றார்கள்.

சீதை ''இந்த அரக்கர் உலகத்தில் எதுவெல்லாம் நடக்குமோ, எனக்கு என்ன தெரியும்? மாயம் கற்ற ராக்ஷசர்களைப் பற்றி நான் ஒன்றும் அறியேன். இந்த வானரம் உங்களில் ஒருவனாகத்தான் இருக்க வேண்

டும். அவனைப் பற்றி உங்களுக்குத் தான் தெரியலாம்'' என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டாள்.

'ஐயோ, சீதை பொய் சொல்லி விட்டாளே! இதற்கு என்ன சமாதானம்?' என்று சில பண்டிதர்கள் சமீபத்தில் தர்க்கம் செய்து கொண்டிருந்தது வாசகர்களுக்கு இந்த சந்தர்ப்பத்தில் ஞாபகம் வரலாம்.

இந்த விவாதத்தைப் போன்ற ஒரு பயனற்ற விவாதத்தை நான் கண்டதில்லை. ''ராம காரியம் உடனே அழிந்து போக வேண்டும் என்று ஆசைப் படுகிறீர்களா? ராமாயணத்தையெல்லாம் வேறு விதமாக நீங்கள்



நடத்தப் போகிறீர்களா? இந்தக் கேள்வி களையெல்லாம் நிறுத்துங்கள்'' என்று இந்த பண்டித சிகாமணிகளுக்குச் சொல் லுவேன்.

''சீதை செய்த மற்றக் காரி யங்களைச் செய்யத் துணிந்து செய்தீர் களானால், சிறைபட்டுக் கிடந்து, துக் கத்தில் கரை காணாமல் ஏங்கி நின்றீர் களானால் இத்தகைய 'பொய்'யை உங் களைக் கேட்கும் அரக்கர்களிடம் நீங்க ளும் சொல்லலாம் அதனால் உங்கள் வாய்மை பங்கம் அடையாது''என்று சொல்லுவேன்.

''யாம் மெய்யாக் கண்டவற்றுள்
இல்லை எனைத் தொன்றும்,
வாய்மையின் நல்ல பிற.

வாய்மை எனப்படுவது
யாது எனின், யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

பொய்மையும் வாய்மை
யிடத்த, புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.''

என்றார் பொய்யா மொழிப் புலவர்!

**அ**சோக வனத்திலிருந்து பயந்து ஓடிய ராக்ஷசிகள் ராவணனிடம் நடந்த தைத் தெரிவித்தார்கள்.

''மன்னனே! ஒரு பயங்கர வடிவங் கொண்ட குரங்கு அசோக வனத்தில் வந்து உங்கள் அரண்மனைப் பெண் களுடைய நந்தவனத்தையெல்லாம் பாழாக்கிக் கொண்டிருக்கிறது. அந்தக் குரங்கைப் பார்த்தால் எங்களுக்கு பய மாக இருக்கிறது. சீதையிடம் இது ஏதோ ரகசியமாகப் பேசிற்று.

இவ்வாறு ராக்ஷசிகள் சொன்னார் கள். ஆனால் தாங்கள் தூங்கிப் போனதை ராக்ஷசேசுவரனிடம் சொல்ல வில்லை.

''நாங்கள் சீதையை எவ்வளவோ கேட்டுப் பார்த்தோம். 'இது யார்? இந்த வானரன் ஏன் இங்கே வந்தான்? உன் னிடம் என்ன பேசினான்?' என்று பல வாறாகக் கேட்டோம். அவள் ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாள். நீங்கள் இந்தக் குரங்கைப் பிடித்து ஒழித்து விட வேண்டும். தகுந்த ஆட்களை அனுப்பு வீர்களாக. மகா பயங்கரமான குரங்கு. அதைப் பிடிக்கும் வல்லமை கொண்ட வீரர்களை உடனே அனுப்புவீர்களாக. இந்தக் குரங்கு அழகிய வனம் முழு வதையும் ஒரே பாழாகச் செய்து விட் டது. ஆனால் இந்த சீதையிருக்கும் சிம் சுபா விருட்சத்தை மட்டிலும் தொட வில்லை. வளர்ந்து படர்ந்திருக்கும் அந்த மரம் கொஞ்சமும் சேதப்பட வில்லை. இதற்குக் காரணம் இருக்க வேண்டும். மற்ற மரங்களையும், கொடி களையும், குளங்களையும் பந்தல் எல்லாவற்றையும் பாழாக்கிய இந்த வானரம் சீதை இருக்கும் இடத்தை மட்டும் விடுவானேன்? இதில் மோசம் இருக்கிறது. இது சாதாரணக் காட்டு மிருகமல்ல. உங்கள் பகைவர்களான தேவேந்தரனோ குபேரனோ அனுப்பிய வானரமாகத்தான் இருக்க வேண்டும். அல்லது அந்த ராமனுடைய வேலை யாக இருக்க வேண்டும். சீதையோடு பேச இந்த வானரத்துக்கு எப்படித் தைரி யம் வந்தது? இவன் ராமனுடைய தூத னாகவே இருக்க வேண்டும். உடனே வீரர்களை அனுப்பி இந்த பயங்கர வான ரத்தைப் பிடிக்கச் சொல்வீர்களாக'' என்றார்கள்.

**த**ன் மனைவிகளுக்காக நிருமா ணித்திருந்த மிக சௌந்தர்யமான பூந் தோட்டம் அழிந்து போன செய்தியைக் கேட்ட ராவணன் மிகுந்த கோபங் கொண்டான். இரண்டு கண்களும் இரண்டு தீவட்டிகளைப் போல் சிவந்து அவற்றிலிருந்து கடர்கட எண்ணெய்த் துளிகள் கொட்டுவது போல் கண்ணீர் வடிந்தது.

உடனே தனக்குப் பக்கத்தில் 'உத்தர வென்ன?' என்று எப்போதும் மிகக் கவனமாக இருந்து கொண்டு வந்த வீரர்களை அனுப்பினான். கதாயுதங் களும் இரும்பு உலக்கைகளும் கத்தி களும் சூலங்களும் எடுத்துக் கொண்டு அவர்கள் போனார்கள்.

(தொடரும்)



''கபில்தேவை ஹீரோவாப் போட்டு பாக்யராஜ் படம் எடுத்தா என்ன பேரு வைப்பார்?''
''விக்கெட்டில விசேஷங்க!''

– திருபானந்த. சிவா



# மகளிர் மட்டும்

டைட்டிலில் தெரியும் தனித்துவமும் ஆரம்பக் காட்சிகள் ஏற்படுத்தும் எதிர்பார்ப்புகளும் கொஞ்ச நேரத்துக்குத்தான். தீவிரமான பெண்கள் பிரச்னைகளைச் சொல்லும் படம் என்றெல்லாம் மிரளத் தேவையில்லை. கிரேஸி மோகனின் டிரேட் மார்க் ஹாஸ்யங்களுடன் சினிமாவாக்கப் பட்டிருக்கும் பச்சை டிராமா.

சபலஸ்தரான எக்ஸ்போர்ட் கம்பெனி மானேஜருக்குப் புத்தி புகட்டும் மூன்று பெண்களின் கதை. நாஸர் ஹீரோவாகி யிருப்பது ஒரு செய்தி. நடிப்பில் சில புதிய எல்லைகளைத் தொட்டிருப்பது தலைப்புச் செய்தி.

ஹீரோயின்? ரேவதி இல்லை. ஊர்வசி! நிற்க வைத்து, ராயல் சல்யூட் அடிக்கலாம். மானேஜருக்குக் காப்பியில் சக்கரைக்குப் பதில் எலிப் பாஷாணத்தைத் தவறுதலாகப் போட்டு, அவர் மண்டையைப் போட்டு விட்டதாக நினைத்து, ஹாஸ்பிடலில் பிரேதம் மாற்றி... தொடர்வதான அந்த வெகு நீளக் காட்சி-கதைக்கு அமீபா அளவும் சம்பந்தமில்லையெனினும் குடல் எகிறி வெளி வந்து விடுமளவுக்கு சிரிக்க வைக்கிறது. கிரேஸிக்கு ஜே! ஊர்வசிக்கு டபுள் ஜே!

இடைவேளைக்குப் பின் அநாவசிய நீட்டல். நாஸரைக் கடத்திப் போய் கட்டி வைப்பதும் அவர் இல்லதா நேரத்தில்- ஒரு பாடலில் ஆபீஸை மாற்றிவிடுவதும் மெலோ டிராமா.

முற்றிலும் வீணடிக்கப்பட்டிருக்கும் ரேவதிக்கு நமது அனுதாபங்கள். கம்ப்யூட்டர் டிஸைனர் என்று கலர் கலர் டிரெஸ்ஸில் வந்து போவதற்கு ரேவதி தேவையில்லை. ஒரு துணிக் கடை பொம்மை போதும்.

அப்புறம் இளையராஜா. மறுபடி திமிர்ந்திருக்கிறார். பாடல்கள் 'தேன்' இல்லையென்றாலும் குறைந்தது இளநீர். அல்லது கரும்பு ஜூஸ்.

கடைசி சீனில் வருவது கமல் தானா? கடவுளே, ஓவர் ஆக்டிங்!

மூளையைக் கழற்றி வைத்து விட்டுத் தியேட்டருக்குப் போனால் நோய் விட்டுப் போகும். வேறேதாவது எதிர்பார்த்தால்...ஏமாந்த கொக்கு!

- ஆர்.பி.ஆர்.

# பாலம்



●● மாதவய்யா எழுதிய "பத்மாவதி சரித்திரம்" இருந்தால் அனுப்பவும். அதைப் புதிதாக அச்சிடுகிறேன். அச்சிடப்பட்ட புத்தகம் அனுப்புகிறேன். புதிய வாசகர்களுக்கும் பயன்படும்.

- புத்தகப் பித்தன்,
இமயம் பதிப்பகம்,
8, நீலா தெற்கு வீதி,
நாகப்பட்டினம் - 611 001.

●● யோகாசனம் பற்றிய டிப்ளமா வகுப்புக்கள் நடக்கிறதா? முகவரி அறிய விரும்புகிறேன்.

- எஸ். முருகதாஸ்,
9/108, கரிகால் சோழன் நகர்,
சுந்தர பெருமாள் கோவில்,
கும்பகோணம் வட்டம் - 614 208.

●● புதிதாகச் சோடா தயாரிப்பு சிறு தொழிலகம் தொடங்க ஆர்வமுள்ளோருக்குத் தொழில் நுணுக்கம் அளிக்கப்படும். இயந்திரங்கள் பழுது பார்க்கவும் உதவுகிறோம்.

- தொ.வ. நடராஜன்,
சோடா ஃபேக்டரி,
நாமகிரிப்பேட்டை,
சேலம் (மா.வ) - 637 406.

●● பிரபல ருஷ்ய நாவல் The Crime and Punishment ஆங்கில வடிவம் - யாரிடமாவது இருக்குமாயின் இரவலாகவோ அல்லது விலைக்கோ தந்து உதவவும்.

- த. வசந்தராஜன்,
163, போலீஸ் காலனி,
பாரதி நகர், கணபதி,
கோவை - 641 006.

●● டாய்லெட் சோப் செய்யும் போது உபயோகப்படுத்தப்படும் (பெர்ஃபியூம்) வாசனைப் பொருள் சரிவர நிற்பது இல்லை. இதனை நிலைக்கச் செய்யும் ஃபிக்சேடிவ் (fixative) பற்றி அறிந்தவர்கள் உதவும்படி கேட்டுக் கொள்கிறேன்.

- எம். ராஜேந்திரன்,
364-ஏ, இரண்டாம் சந்து விரிவாக்கம்,
காந்திபுரம், கோவை - 12.

●● தமிழக இளம் எழுத்தாளர் பேரவையில் இணைந்து செயலாற்ற விரும்பும் அனைத்து மாவட்ட இளம் எழுத்தாளர்களையும் அன்புடன் அழைக்கிறோம். பேரவை தொடங்க இருக்கும் மாத இதழுக்குப் பெயர் சூட்டிப் பரிசு பெறுவீர்!

- தமிழக இளம் எழுத்தாளர் பேரவை,
தலைமைச் செயலகம்,
20, என்.எம்.ஆர்.எஸ். சாலை,
காமராஜபுரம், மதுரை - 625 009.

●● B.E. Electronics and Communication Engineering க்கு உரிய, இரண்டாம் ஆண்டு முதல் நான்காம் ஆண்டு வரைக்கான, அனைத்துப் பாடப் புத்தகங்களையும் விற்கத் தயாராக உள்ளேன்.

- ஏ. சதீஷ் குமார்,
C-12, பெரியார் நகர்,
ஈரோடு - 638 001.

●● 1989 ம் ஆண்டு சென்னை பல்கலைக் கழகம் நடத்திய எம்.ஏ. தேர்வின் கால அட்டவணை தேவைப்படுகிறது. ஜெராக்ஸ் அல்லது அசல் அனுப்பினால் நன்றி.

- எஸ். ஹரிலன்,
17, பிள்ளையார் கோவில் தெரு,
காஸ்பா, வேலூர்.
வ.ஆ.அ. (மா.வ) - 632 003.

●● Muscular Dystrophy என்ற தசை பலவீனத்தால் பாதிக்கப்பட்டு வீட்டை விட்டு வெளியேற இல்லாத நிலையில் உள்ள எனக்கு நல்ல மனம் உள்ள நண்பர்கள் தேவை.

- ஏ. சாமுவேல்,
4/852, ஆசாத் வீதி,
தாசில்தார் நகர்,
மதுரை - 625 020.

●● Electronics for you மாத இதழின் பழைய பிரதிகள் தேவை.

- எஸ். நியாஸ் முகமது,
8, நடுத் தெரு,
வலங்கைமான் - 612 804.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்)

தேவிபாலா A/c
அன்னை அபிராமி A/c
4 காட்சிகள்
சந்திரன் A/c
3 காட்சிகள்
அகஸ்தியா 70mm
பகல் 11.30 மணி



கமல்ஹாஸன்
வழங்கும்
ராஜ்கமலின்

# மகளிர் மட்டும்

சிங்கீதம் சீனிவாசராவ்
இளையராஜா

Elegant

# வண்ணத்துப்பூச்சி வேட்டை



10

சுஜாதா

சமையல் செய்தல்
படுக்கையை விரித்தல்
குழந்தை பெறுதல்
பணிந்து நடத்தல்
இவையே எனது கடமை ஆகும்.
— அ.சங்கரி - 'சொல்லாத சேதிகள்'

அந்த மாலை நேரம் நம்ப முடியாத சந்தோஷமாக இருந்தது. நவீன நடனம் என்று சொல்லி, அவர்கள் மேற்கத்திய ஸிம்ஃபனி இசைக்கு ஏற்றவாறு நடன அசைவுகள் செய்தார்கள். அந்த அசைவுகள் எப்படியோ அந்த இசையின் உணர்ச்சியைக் கடத்த முற்பட்டன. பரத நாட்டியம் போல வெளிப்படையாக அபிநயம் எல்லாம் புரியும்படியாக இல்லாமல், கொஞ்சம் ஸர்ரியல் என்று சொல்வார்களே, அவ்வாறான அசைவுகளை வயலின்களின் ஒத்த இசையுடன் பார்க்கும்போது, உற்சாகமாக இருந்தது.

அர்ஜுன் கவனிக்கவில்லை. அவர் பார்வை அடிக்கடி யார் வந்திருக்கிறார்கள் என்பதிலேயே அலைந்தது. நடனம் ஆரம்பிக்கும் முன் ''இதோபாரு, அவர்தான் இந்த பாங்க் சேர்மன். இவர்தான் அந்த கம்பெனி எம்.டி.'' என்று அடையாளம் காட்டிக் கொண்டே வந்தபோது, ''அங்க உக்காந்திருக்கான் பாரு, வினா அவன்தான் என் பார்ட்னர். பக்கத்தில் இருக்கா பாரு அவதான் கீதா.''

நாங்கள் இருந்த இடத்திலிருந்து நாலு வரிசை முன்னே உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் திரும்பியபோது, எங்களைப் பார்த்து இருவரும் கையசைத்தார்கள்.

கீதாவின் முதுகு தெரிந்தது. தலைமயிரைக் குட்டையாக வெட்டி, கரு நீலத்தில் ஸாரியும் செங்கல் வண்ண சோலியும் முதுகை அதிகமாக மறைக்கவில்லை.

மூன்று நடனங்கள் முடிந்தபின் ஓர் ஆசாமி தபலா வாசிக்க, கதிக்கேற்ப கலைஞர்கள் ஆடினார்கள். இடைவேளையில் அவர்கள் இருவரும் எங்கள் வரிசையை நோக்கி வந்தார்கள். அருகில் இடம் இருந்ததைப் பார்த்து, என்னருகில் வந்து உட்கார்ந்தார்கள். அந்த கீதா பெண் என் பக்கத்தில் உட்கார்ந்தாள். வாசனையாக இருந்தது.

''நான் கல்யாணத்துக்கு வர முடியலை. அதுக்கப்புறம் ஹனிமூன் போய்ட்டீங்க. அர்ஜுன் கண்ணா உங்க ஒய்ப் ரொம்ப அழகா இருக்காங்க.''

''உனக்குப் போய் இந்த அப்ஸரஸா, எல்லாம் மச்சம்!'' என்றார் அவர் பார்ட்னர்.

விநாயகமாம் முழுப் பெயர். வினா என்று கூப்பிடுவார்களாம். குறுந்தாடி, கையில் பைப் பற்ற வைப்பதற்கு உண்டான சாமக்கிரியைகள் வைத்திருந்தார். கட்டுவிரல் பழுப்பாக இருந்தது. ப்ரேம் போட்ட கண்ணாடியுடன் அலட்சியமாக மேலே தொளதொளவென்று விடப்பட்ட அமெரிக்க சட்டையும் இண்டலெக்சுவல் தோற்றம் தந்தன.

''அர்ஜுனுக்கு இந்த டான்ஸெல்லாம் பிடிக்காதே? எப்படி அர்ஜுன் கல்யாணம் ஆனப்புறம் மாறிட்டியா?''

''எல்லாம் இவளாலதான்'' என்று என்னைக் காட்ட, எல்லாரும் பார்த்து நான் ஏதோ சொல்லக் காத்திருந்தார்கள். புன்னகைபோல ஏதோ செய்தேன்.

கீதாவுக்கு என்னை விட இரண்டு மூன்று வயது கூடுதலாக இருக்கலாம். ஆனால் தோற்றத்தில் எளிமை இருந்தது. அந்தப் புடைவை முரட்டு காட்டன். என் புடைவையைப் பார்த்து, ''இந்தப் புடைவை எங்க வாங்கினீங்க. ரொம்ப அழகா இருக்கு'' என்றாள்.

அவள் கண்கள் நேராக என்னைப் பார்த்து, என்னுடன் சிநேகமாக இரு என்று கேட்டுக் கொண்டன. விமல் ஸாரி



''இந்தப் படத்தின் டைரக்டர் அதிக நன்றி உணர்ச்சி உடையவர் போல் இருக்கு!''
''எப்படிச் சொல்றே?''
''டைட்டில் போடும்போது இந்தப் படத்தின் திரைக்கதை அமைக்க உதவிய ஐந்தாறு ஆங்கில படங்களின் பெயர்களையும் நன்றி கார்டு போட்டுக் காட்டினாரே!''
- கோவி. இராஜேந்திரன்

விளம்பரத்தில் வரும் பெண் போல பூ என்று ஊதினால் பறந்துபோய் விடுவாள் போல இருந்தாள். விரல் நகப்பூச்சில் இரண்டு மணி நேர கவனம் தெரிந்தது.

இடைவேளை முடிந்து, மறுபடி மேடை இருண்டபோது, அவர்கள் அப்புறம் சந்திப்பதாகச் சொல்லி விட்டுச் செல்லும்போது, அவள் அர்ஜுனின் தலையை சிநேகமாகக் கலைத்து ''ஸோ லாங் காஸனோவா'' என்று சொன்னபோது, சட்டென்று அர்ஜுன் என் முகத்தைப் பார்த்தார். நான் மையமாகச் சிரித்தேன்.

காட்சி முடிந்து வெளியே வந்ததும் அவர்கள் எங்களுக்காகக் காத்திருந்து, நிச்சயம் அருகில் உள்ள பெரிய ஓட்டலுக்குப் போய், சாப்பிடத்தான் வேண்டும் என்று சொன்னார்கள்.

நான் வீட்டில் சமைத்து வைத்திருக்கிறேன் என்று சொல்லிப் பார்த்தேன்.

''அப்படியெல்லாம் தப்பிக்க முடியாது. அப்ப வீட்டுக்கு வர்றோம், சாப்பாடு போடறீங்களா? லெட்ஸ் ஷேர்'' என்றார் விநாயகம். ''சரி'' என்று தலையசைத்தேன்.

''ஸ்காட்ச் வெச்சிருக்கில்லை?'' .

''சேச்சே. வினா, நீ பாட்டுக்கு ஏதாவது சொல்லி, அவ உண்மைன்னு நெனைச்சுக்கப் போறா...''

''உண்மை இல்லையா பின்ன. நீ குடிக்க மாட்டியா?''

''வினா, ப்ளீஸ் அவளை ஒவக்குத் தெரியாது. எது உண்மை எது கேலின்னு பிரிக்க முடியாது அவளால. நீ பாட்டுக்கு எதையாவது சொல்லி ப்ராப்ளமாயிரும். இப்பத்தான் நான் சூதாடி இல்லைன்னு கன்வின்ஸ் பண்ணியிருக்கேன்.''

''அப்படியா சிஸ்டர்! சொல்லுங்க'' என்றார்.

எனக்கு அந்த விளையாட்டின் விதிகள் புரியவில்லை.

அர்ஜுன் என்னை அவசரமாகப் பார்த்து, ''சொளாவே போயிரலாம்'' என்றார்.

பெரும்பாலும் மௌனமாகத்தான் இருந்தேன். கீதா நிறைய பேசினாள். ''அர்ஜுனைப் பத்தி என்ன சந்தேகம் வேணும்னாலும் என்கிட்ட கேளுங்க, அவரை எனக்கு நல்லாவே தெரியும். இல்லை அர்ஜுன்'' என்று கண் சிமிட்டினாள். இது என்ன உறவு?

''தப்பா சொல்றேன்னு நெனைச்சுக் காதிங்க, உங்க கம்ப்ளெக்ஷனுக்கு இந்த மாதிரி ஹெவி ஸாரியெல்லாம் கட்டக் கூடாது. உங்களுக்கு டேப் எம்ப்ராய்டரி போட்ட காக்ராவும் ரஸ்ட் கோல்டு கலர்ல துப்பட்டா ப்ளவுஸ், ஸ்மாஷிங்கா இருக்கும். ஒரு பொட்டிக்ல பார்த்தேன். நாளைக்கு நீங்க ஆபீஸுக்கு வாங்க, வாங்கித் தரேன். அர்ஜுன் நாளைக்கு உங்க மனைவியைக் கூட்டிட்டு வாங்க, என்ன! ஐல் செலக்ட் ஸம் நைஸ் ட்ரெஸஸ் ஃபார் ஹர்'' என்றாள்.

பெரும்பாலும் அவர்கள் மூவரும்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். ஓரபின் இஷ்யு ஓவர் ஸப்ஸ்க்ரைப்டு; முயுசுவல் ஃபண்டெல்லாம் அவங்க எதிர்பார்த்த அளவுக்கு இல்லை; சென்செக்ஸ் டைடாய்டு ஜுரம் மாதிரி ஏறி இறங்குது'' இவ்வாறான சம்பாஷணை.

தரையில் இன்டுபோட்டு உட்கார்ந்து கொண்டு சித்தார்காரர் லேசாகக் கம்பிகளை திரடிக் கொண்டிருக்க, வெள்ளைக்காரர்கள் வந்து போன வண்ணமாக இருந்தார்கள்.

''நீங்க ஏன் பேசவே மாட்டேங்கறீங்க'' என்றாள் கீதா.

''ஆபீஸ் விஷயம் புரியலை'' என்றேன். தொடர்ந்து, ''உங்க முழுப்பேரு கீதாஞ்சலியா''என்றேன்.

''ஆமாம், அர்ஜுன் என்னைப் பத்தி என்ன சொன்னார்?''

''நீங்க ஆபிஸ்ல இப்ப வேலைல இல்லைன்னு சொன்னார்?''

''இல்லையே, யார் சொன்னது? ஹே, விஸன்! அர்ஜுன் இவங்க கிட்ட புருடா விட்டிருக்காரு. கீதாஞ்சலி வேலைல இல்லையாம்.''

அர்ஜுன் நாங்கள் பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

''ஐல் எக்ஸ்ப்ளெய்ன் தட் கீதா. இப்ப வேண்டாம்''என்றார்.

''உங்களை ஆபீஸ்லிருந்து நீக்கிட்டதாச் சொன்னார்.''

''வாட் ஃபார்? வாட் எவர் ஃபார்'' என்றாள் ஆச்சரியத்துடன்.

''ரேகா நான் அப்புறம் சொல்றேன். அப்புறம் அதைப்பத்திப் பேசலாம்.''

''உனக்குத் தெரிஞ்சு அப்படி ஏதும் இருக்கா வினா?''

''சேச்சே! நான்சென்ஸ்'' என்றார் வினாயகம்.

''லெட்ஸ் ட்ராப் இஸ்'' என்றார் அர்ஜுன்.

திரும்ப வீட்டுக்குச் செல்லும்போது அனாவசியத்துக்குக் காரை வேகமாக ஓட்டி, கோபம் இருக்கிறதாகக் காட்டிக் கொண்டார். நான் என்ன தப்புச் செய்தேன் என்பது புரியவில்லை.

சிக்னலில் நிற்கும்போது, ''எதெதை எப்பப்பப் பேசணும்னு முதல்ல கத்துக்கணும் ரேகா. கீதாவை வேலையை விட்டு நிறுத்தப் போறதை நானும் வினாயகமும் ரகசியமாக வெச்சிருந்தோம். ராபணான்னு போட்டு உடைச்சுட்டே.''

''ஸாரி, நீங்க அவளை வேலையை விட்டு நீக்கிட்டதாச் சொன்னிங்க, அதனால தான்.''

''அப்படியே சொல்லியிருந்தாலும் அப்படி நேரடியா கேக்கலாமா? நீ டெல்லில படிச்சவதானே. கல்ச்சர்னு ஒண்ணு வேண்டாமா?''

''இதில் கல்ச்சர் எங்க வரது? எனக்கு இன்ஃபர்மேஷனுக்கு நான் கேட்டதில் ஏதும் தப்பு இருக்கறதாத் தெரியலை.''

''அதான் ப்ராப்ளம். எப்பவுமே நீதான் ரைட். அதான் உன் ப்ராப்ளம்.''

''அவ எதுக்கு என் புடைவை நல்லால்லைன்னு சொல்லணும்? முதல்ல நன்னா இருக்குன்னு சொல்லிட்டு?''

''இதெல்லாம் காமன் கர்டஸி ரேகா. உனக்குப் புரியாது.''

''அவ ஒண்ணும் எனக்கு ட்ரெஸ் செலக்ட் பண்ண வேண்டாம்.''

''சரிசரி ஆளைவிடு'' என்று காரின் க்ளவ் பாக்ஸிலிருந்து ஒரு சிகரெட் எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார்.

''சிகரெட் பழக்கம் கிடையாதுன்னு, எதுக்குப் பொய்?''

''பழக்கம் இல்லை எப்பவாவது தான்... டென்ஷனா இருக்கறப்ப குடிப்பேன்.''

## PENSIONERS' PET DEPOSIT SCHEME

| Period | 1 year | 2 years | 3 years |
|---|---|---|---|
| Interest | 20% | 20.5% | 21% |

**Minimum Deposit Amount Rs. 12,500/-**

## PPD CUMULATIVE SCHEME

| | One Year (Rs.) | Two Years (Rs.) | Three Years (Rs.) |
|---|---|---|---|
| Rs. 5,000/- | 6,065/- | 7,435/- | 9,200/- |
| Rs.10,000/- | 12,150/- | 14,890/- | 18,400/- |

## SAVINGS DEPOSIT SCHEME

**Highest ever 12 % interest**

Interest calculated on the minimum balance maintained between 6th & 25th, and credited once in six months. Account can be operated between 9.00 a.m. to 5.30 p.m.

## INSTANT GOLD JEWEL LOANS

Offered @ Rs. **3,100/-** per ten grams.
Jewel Loans also offered at all our branches
from 9 am - 4 pm

* * *

## MORTGAGE LOANS

Offered against completed flats and other
city properties.
Quick processing & Immediate disbursement

Jachyon/ABFL/109/94

ABF LIMITED

# Alwarpet Benefit Fund Limited

(A Govt. of India approved Nidhi Company)

**Corporate Office: Alwarpet:** 43-B, C.P. Ramaswamy Road, (Opp. State Bank of Mysore), Madras –600018. Ph: 499 4809 • **Branches - Adayar:** Gokul Homes, (Near Adayar Signal), 2, Sardar Patel Road, Madras – 600 020 • **Nanganallur:** 19, 4th Main Road, (6th Main Corner), Madras – 600 061 • **Ashok Nagar:** 13-E, 10th Avenue, Pillar Apartments, Madras – 600 083 • **Anna Nagar:** AA-147, III Avenue, (Near Round Tana), Madras - 600 040 • **George Town:** S.M.Plaza, 45, Armenian Street, (Near Hotel Palimar), Madras - 600 001 • **Tambaram:** 3-D, Mudichur Road, (Opp. LNC Cloth Store), Madras - 600 045 • **Pondicherry:** 52, Mission Street, (Above Kalki Boutique), Pondicherry - 625 001.

Transaction with Shareholders only

''இப்ப என்ன டென்ஷன்? கீதாவைப் பற்றிக் கேட்டது டென்ஷனா?''

''ஆமாம்.''

''அப்ப எதுக்காக அவ கூட ஓட்டனு மாம்? இந்த ஓட்டலுக்குப் போறதையே அவாய்ட் பண்ணிருக்கலாமில்லை.''

''இனிமே அவாய்ட் பண்ணறேன்'' என்றார்.

இந்த மாதிரியெல்லாம் ப்ராப்ளம் இருக்கா மேரேஜ்ல?

கார்க் கதவை வேண்டுமென்றே ஓங்கிச் சாத்தினார்.

வீட்டுக்குள் நுழைந்து பூட்ஸை காலாலேயே கழற்றி உதறி, உதைத்து எறிந்தார். படுக்கைக்குப் போய் சப்தம் போடாமல் படுத்துக் கொண்டார்.

''பால் வேணுமா?'' என்றேன். பதிலே சொல்லவில்லை. தூங்குவது போல பாசாங்கு செய்தார்.

நானும் கவலைப்படாமல் பாலுக்கு உரை குத்திவிட்டு, எல்லா பாத்திரங்களையும் மூடி விட்டு, வேலைக்காரிக்கு உண்டான பாத்திரங்களைப் போட்டுவிட்டு வந்து, படுத்துக் கொண்டேன். நடு ராத்திரியில் நிச்சயம் எழுப்புவார் என்று படுத்துக் கொண்டு விட்டேன். எழுப்பிச் சம்மதமில்லாமல் என்னைப் பயன்படுத்தினார்.

காலை எழுந்தபோது, அவருடைய சன்னமான மெட்டில்லாத பாட்டு, பாத்ரூமில் கேட்டது. இத்தனை சீக்கிரம் ஆபீஸ் கிளம்புவார் என்று தெரியவில்லை. எழுந்து அவசர அவசரமாக ப்ரெக்ஃபாஸ்ட் ஏற்பாடு செய்தேன். முதல் தினம் எதுவுமே நடக்கவில்லை போல், குட்மார்னிங் என்று உற்சாகமாகச் சொல்லிவிட்டு, ''இன்னிக்கு ஆபீஸ்ல முக்கியமான மீட்டிங். அதுக்காத் தானே தேனிலவை எல்லாம் கான்ஸல் பண்ணிட்டு வந்திருக்கேன். காலை குழந்தை போல தூங்கிண்டிருந்த உன் அழகான முகத்தில் விழிச்சதில் இன்னிக்கு எனக்கு அதிர்ஷ்ட தினம். எல்லாம் சரியா இருந்ததுன்னா என் முதல் லட்சம் இன்னிக்குப் பண்ணப்போறேன்'' என்றார். சின்ன டயரியில் இருந்த எண்களை கால்குலேட்டரில் ஒத்திக் கொண்டே சாப்பிட்டார்.

''தோசை எப்படி இருக்கு?''

''டிவைன்! உன் கை பட்டதிலேயே அதில தனி டேஸ்ட் வந்திருக்கு''.

''ஓட்டலிலிருந்து வரவழைச்சது.''

''தட்ஸ் த பாயிண்ட்! சாதாரண ஓட்டல் தோசை, உன் கைபட்டதும் டேஸ்ட் வந்து விட்டது.''

''சமாளிக்கிறதில் எக்ஸ்பர்ட்'' என்று அவர் தலையைக் கலைத்தேன். ''அந்த கீதா விவகாரத்தை எப்படி சமாளிச்சே!'' என்றேன்.

''கீதா? யாரு கீதா? கீதான்னு எனக்கு யாரையுமே தெரியாது'' என்று பாசாங்கு அறியாமையில் சொன்னார்.

## என்ன, தயாரா?

விடுமுறைச் சிறப்பு மலராக வெளிவரவிருக்கும் 17.4.94 கல்கி இதழில் நீங்களும் பங்கேற்க ஒரு வாய்ப்பு!

விடுமுறைக்கு வெளியூர் சென்ற போது நீங்கள் சந்தித்த வித்தியாசமான நபர் அல்லது அனுபவம் பற்றிச் சுருக்கமாக போஸ்ட் கார்டில் எழுதியனுப்புங்கள். நீங்கள் எடுத்த வித்தியாசமான புகைப்படம் இருந்தாலும் அனுப்புங்கள்.

நீங்கள் அனுப்பும் கார்டு மற்றும் உறையின் மீது, 'விடுமுறையில் வித்தியாசம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்கள்.

கடைசித் தேதி : 15.3.94

ஏற்கப்படாத புகைப்படங்களைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் இணைக்க வேண்டியது அவசியம்.

– ஆசிரியர்

''நம்பறேன் நம்பறேன்'' என்றேன் நானும் பாசாங்காக.

அவர் ஆபீஸ் போனதும் டெலிபோன் வந்தது. ''ஹாய் ரேகா, நான் கீதா பேசறேன்.''

''அவர் ஆபீஸ் போயாச்சே'' என்றேன்.

''நான் அர்ஜுனோட பேசறதுக்குக் கூப்பிடல. உங்களோட பேசணும். கமான் பத்துப் பதினோரு மணிக்கு ரெடியா இருங்க. அந்த டிரஸ் சொல்வேன் பாருங்க, அந்த பொட்டிக்குக்கு அழைச்சுட்டுப் போறேன்.''

''எனக்கு அதெல்லாம் வேண்டாம்.''

''கமான்! டோன்ட் பி ஸில்லி! வீட்டில என்ன செய்யப் போறீங்க? கம் அவுட் ரேகா. வி ஆர் ஃப்ரெண்ட்ஸ். அர்ஜுனுக்கு மட்டும் இல்லாம, உங்களுக்கும் நான்தான் செக்ரட்டரி. ரெண்டு பேரும் நாள் முழுக்க இன்னிக்கு மீட்டிங்ல இருக்கப் போறாங்க. அதனால நான் மத்யானம் ஃப்ரீயா இருக்கிறதாலே வந்தே தீரணும்.''

''எனக்கு வீட்டில நிறைய வேலை இருக்கு.''

''கம்மா கதை விடாதிங்க. நான் வேணா வந்து ஹெல்ப் பண்றேன், வாங்கன்னா...''

'போய்த்தான் பார்க்கலாமே, அவளிடம் எனக்கு என்ன பயம்?' என்று தோன்றியது.

(தொடரும்)

# ஸ்ரீராம் சிட்ஸ்

## வெற்றிக்குத் தலை வணங்குகிறது.



குடும்பத்தில் வறுமை ஏற்பட்டு, மூத்த பெண்ணாக இருந்து பொறுப்புகளைச் சுமக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாகும் போது பிரச்னைகளுக்கு கேட்கவா வேண்டும் ! என் நிலைமை அதுவாகத்தான் இருந்தது.

படித்துப் பட்டம் வாங்கி என்ன பிரயோசனம் ? வேலை, வேலை என்று பாங்க் வேலைக்கும் கம்பெனி வேலைக்கும் மனுப் போட்டதுதான் மிச்சம். பலன் எதுவும் இல்லை.

வறுமை கூடியது. பொறுமை எல்லை மீறியது. ஏதாவது செய்தே ஆகவேண்டும் என்கிற கட்டாய நிலை.

ஒரு நாள், தனியார் நிறுவனம் ஒன்றில் பணியாற்றும் என் தோழி ஒருத்தியைச் சந்திக்கச் சென்ற போது, அவள் கூறியது என்னைச் சிந்திக்க வைத்தது. அவள் பகலுணவு எதுவும் கொண்டு வருவது கிடையாது. பின் ?

"டெஸ்க் லஞ்ச் என்று கேள்விப் பட்டதில்லை ? இதற்கென்றே உள்ள நிறுவனங்கள் லஞ்ச் தயார் செய்து சப்ளை செய்கின்றன" என்றாள் அவள்.

அவ்வளவுதான். பளிச்சென்று முடிவெடுத்தேன்.

இதற்குப் பெரிய மூலதனம் தேவையில்லை. உதவிக்கு அப்பா, அம்மா, தம்பி, தங்கைகள்.... அப்புறம் என்ன ?

சில சிறிய நிறுவனங்களை அணுகி ஒப்புதல் வாங்கினேன். சிறிய அளவில் டெஸ்க் லஞ்ச் சர்வீசை ஆரம்பித்தேன். ஆரம்பத்தில் எத்தனையோ பிரச்னைகள், கஷ்டங்கள், உதாசீனங்கள், எதையுமே பொருட்படுத்தவில்லை. ஒரே வைராக்கியம். எப்படியும் வெற்றி பெறவேண்டும் என்பதில் ஒரே முனைப்பு.

இன்று என் தொழில் வளர்ந்து விட்டது. நிறையப்பேருக்கு என்னால் வேலை தரமுடிகிறது. எந்தவொரு நிகழ்ச்சியானாலும், பர்த்டே பார்ட்டியானாலும் சர்வீஸுக்கு அழைப்பு வருகிறது. எங்கள் குடும்பத்திலிருந்து வறுமை நீங்கி விட்டது.

முயன்றால் முடியாதது எதுவுமில்லை என்பதில் எனக்கு முழு நம்பிக்கை வந்துவிட்டது.

ஆ. சுதா, ஆலந்தூர் - 600 016/



✱ இரத்தினகிரி ஆலயம்....

# அன்று, நரிகள் திரிந்த இடம்; இன்று, முருகன் அருளும் தலம்!

இன்றைக்குப் பல லட்சங்களுக்கு அதிபதியாகித் திருமண மண்டபங்கள், மருத்துவமனை, பள்ளிகள் என்றெல்லாம் அறப்பணிகளிலும் புகழ் சேர்த்து நிற்கும் முருகப் பெருமான், வள்ளி தேவயானை சமேதராக, முப்பதாண்டுகளுக்கு முன்னால் இரத்தினகிரியில் கோவில் கொண்டிருந்த போது என்ன நிலை தெரியுமா? நரிகள் திரிந்து கொண்டிருந்தன என்பதுதான்.

சின்னஞ்சிறிய குன்று இரத்தின கிரி. வேலூரிலிருந்து சென்னை வருகிற பாதை யில் சற்றே இடப்புறம் திரும்பி நடந்தால், அழகான பாதையில் கோவிலை அடைய லாம். சுத்தமான சூழல். அதுவும் காலை நேரத்தில் மனதுக்கு மிகவும் இதமான இடம். ஆயினும் 1968 க்கு முன்வரை இந்த முருகனைத் தரிசிக்கப் படிகள் கிடையாது. மலைப் பாதை மீது தட்டுத் தடுமாறித்தான் ஏற வேண்டும். 'நரிகள்' உலா வராமல் வேறு எப்படி இருந்திருக்க முடியும்?

அன்றைய முருகனை 'பக்தியால் யானுனைப் பலகாலும்' என்றெல்லாம் அருணகிரி நாதரே பாடிப் பரவியிருந்த போதிலும் கேட்பாரற்றேதான் இருந்திருக்கிறார். அப்போதிருந்தவை, சிதிலமடைந்த நிலையில் ஒரு சிறு கட்டுமானம், கரம்பு இல்லாமல் உடைந்த ஒரு சேவல் கொடி. செம்பாலான ஒரு வேல், விபூதி கூட இல்லாமல் ஒரு வெற்றுத் தகர டப்பி... - இவைதாம்.

இப்படி ஒரு நிலையில், அருள்கரக்கும் முருகனைக்காண நேர்கிற எந்த உண்மை பக்தனுக்கும் நேரக்கூடிய உணர்வுதான் பின்னால் பாலமுருகன் அடிமையாகப் போகும் மின்வாரிய ஊழியரான சச்சி தானந்தத்துக்கும் ஏற்பட்டது. ஆனால் அவருக்கு ஏற்பட்ட உணர்வு, பேச்சை நிறுத்தி விட்டு மூச்சு உள்ளவரை உழைத்துக் குமரனை மேநிலைக்குக் கொண்டுவருவது என்பதாக அமைந்தது.

இந்த மலை அமைந்துள்ள சிற்றூரின் பெயரே இனிமையானது. கீழ்மின்னல்! அங்கேயே ஒரு பழைமையான கோவிலும் உண்டு. அழகம்மை, அம்மையப்ப நாதர் என்கிற திருநாமங்களோடு.

இரத்தினகிரி முருகனைத் தரிசிப்பதற் காக மலைப்படிகள் அமைத்த திருப்பணி யில், இந்துச் சகோதரர்களுடன் இஸ்லாமிய சகோதரர்களும் ஒருங்கிணைந்து 'கரசேவை' ஆற்றியிருக்கிறார்கள் என்பது பலரும் அறிய வேண்டிய செய்தி. எல்லா உயிர்களுமே சமம் என்கிற கோட்பாட்டுடன் அண்ணல் நபிகள் நாயகம் அவர்களின் வாக்கு ஒன்று உண்டு. ''நீங்கள் ஒருவரையொருவர் நேசிக்காதவரை உண்மையான இறை நம்பிக்கையாளர்களாக விளங்க முடியாது. நீங்கள் எதனைச் செய்தால் உங்களிடையே நேசம் வளருமோ அத்தகைய ஒரு செயலை

**கமலமனராஜன்**

உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? உங்களிடையே ஸலாமைப் பரப்புங்கள்...'' என்பதே அது. அதனை வாழ்வில் கடைப்பிடிக்கிறார்கள் அந்த முஸ்லிம் அன்பர்கள்.

கருவறையின் திருப்பணி வேலைகள் நடைபெறுவதால், சந்நிதியில் இப்போது மூன்று குத்து விளக்குகளே சுடர் விடுகின்றன. கருவறையிலுள்ள முருகன் - வள்ளி தேவயானை திருஉருவங்கள் பாலாலயம் ஒன்று கட்டி இடம் பெயர்ந்துள்ளன. காலை ஐந்து மணி முதல் இரவு ஒன்பது மணிவரை இந்த தீபங்களையே இறைவன் உருவமாகத் தரிசிப்பதும் ஒரு மெய் சிலிர்க்கும் அனுபவம்தான். முருகனே ஞானச் சுடர் இல்லையா?

மற்ற ஆலயங்களை விட முற்றிலும் வித்தியாசமான ஓர் அனுபவம் இங்கு மட்டுமே அடியார்களுக்குக் கிடைக்கிறது. பதின்மூன்றடி உயரமுள்ள தங்கத்தேரைக் கட்டணம் எதுவுமே இல்லாமல் ஆடிக் கிருத்திகையில் வடம்பிடிக்க முடிகிறது. இரத்தினகிரி ஆலய நிர்வாகத்தை அரசு ஏற்ற போதே, இந்தத் தங்கத் தேருக்குக்



✱ உருவாகப்போகும் ஆறுகோணக்குளம்

கட்டணம் பெறுதல் கூடாது என்ற ''அடிமை''யாரின் நிபந்தனை ஏற்கப்பட்டிருக்கிறது.

மலையடிவாரத்தில் நாகரும், விநாயகரும் அழகாகக் காட்சி தர, அந்த உற்சாகத்தோடேயே படியேறலாம். முக்கியமான நாட்களில் பெண்கள், படிகளையெல்லாம் நீரால் சுத்தப்படுத்தி, மஞ்சள் குங்குமம் இட்டு வணங்கிப் படியேறுவார்கள்.

படிகள் முடியும் இடத்தில் கம்பீரமான ராஜகோபுரம் அழகுற உயர்ந்து நிற்கிறது. கோபுரத்தின் வெளிப்புறத்தில் இடப்புறம் யோக தட்சிணாமூர்த்தியும் வலப்புறம் பிரும்மாவும் அழகான தோற்றத்தில் அருள் பாலிக்கிறார்கள். மேலேயே விநாயகர் சந்நிதியும் தனியே உண்டு. அடிவாரத்தில் படிகள் தொடங்குமிடத்திலும் ஓர் ஆலயம். வரசித்தி விநாயகர். மூலஸ்தானம் தவிர மற்றைய அனைத்தும் கடந்த முப்பது ஆண்டுகளுக்குள் உருவானவை.

பால முருகன் - மூர்த்தியில் சிறியவர் என்று கூற முடியாத நல்ல உயரமான வடிவம்.

ஆலயங்கள் வெறும் வழிபாட்டுக் கூடங்கள் என்கிற நிலைக்கும் அப்பாற்பட்டுச் செயல்படும் இடங்கள் மிகக் குறைவு. அவற்றில் ஒன்றுதான் இரத்தினகிரி. ஆலயத்துக்கு அருகிலேயே மேல் நிலை நீர்த் தொட்டி அமைத்து, நிலத்தடிக் குழாய்கள் மூலம் பாலாற்றிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரம் தண்ணீர் கொண்டு வந்து மேலே தேக்குகிறார்கள். ஊர் முழுவதும் நல்ல சுகாதாரமான தண்ணீர் கிடைக்கிறது.

அன்று இரத்தினகிரி மலை மீதே நரிகள் சுற்றும் என்றால் மலையை வலம் வரப் பாதையா இருந்திருக்கும்? இப்போது கிரி பிரதக்ஷிணத்திற்காக அழகான சாலை அமைந்துள்ளது.

✱ வள்ளி - தேவயானையுடன் முருகன்....





**அடுத்த இதழில்....**

**●● அமைதியை வலியுறுத்தும் துப்பாக்கிப் பயிற்சி!**

**- கவர் ஸ்டோரி**

சித்த மருத்துவமனை, இருபத்தைந்து படுக்கைகளோடு கூடிய மருத்துவமனை, குடியிருப்பு இல்லங்கள், ஆங்கிலப் பள்ளி, திருமண மண்டபங்கள் - என்று இரத்தின கிரி வளாகம் பல சமுதாயப் பணிகளுக்கும் சிறப்பிடம் நல்கியுள்ளது.

முருகனுக்குரிய அனைத்துத் திரு விழாக்களும் சிறப்புற நடைபெறு கின்றன. பங்குனி உத்தரத்தின் போது நூற்றெட்டுக் குடங்களில் நடக்கும் பால் அபிஷேகம் காணற்கு அரியது. நூற்று ஐம்பத்தியொரு ரூபாய் செலுத்திவிட்டால் பிரசாதத்தோடு பால் செம்பும் பக்தர்களுக்குக் கிடைக்கும்.

இன்று, 'கல் கல்' என்று உளியின் ஓசை கேட்டுக் கொண்டேயிருக்கிறது. உருவாகி வரும் கருவறையைச் சுற்றிலும் அடிவரை களில் ரமணர், காஞ்சிப் பெரியவர், வாரி யார் சுவாமிகள், நக்கீரர், அருணகிரியார், போகர் போன்ற சான்றோர்களின் உருவங் கள் 9'' உயரத்துச் சிலைகளாக அமைக்கப் படுகின்றன.

மலைக்கு எதிரில் இடப்புறம் உள்ள பொய்கையை அறுகோணமுடைய குள மாக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். குளத் தின் மத்தியில் மண்டபம். அதில் முருகன் திருவுருவம் அமைக்கப் போகிறார்கள். இருபத்து மூன்று லட்ச ரூபாய் மதிப் பீட்டில் இந்தத் திருப்பணிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அன்று நரிகள் திரிந்த இடத்தை இன்று பக்தர்கள் உய்யும் தலமாக மாற்றி அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார், முருகன்!

படங்கள் : யெஸ்பால்



* உலக 'ஜெ' மாநாடு!



* 'பாக்' வேலை!

● கே.ஆர்.உபேந்திரன், தஞ்சை

*? உலகத் தமிழ் மாநாடு என்ற பெயரில் கோடிக் கணக்கில் செலவு செய்து விழா காணத் திட்டமிடப்பட்டுள்ளதே!*

! கோடிக் கணக்கில் செலவா? தப்பு. ஐயா, தப்பு! கோடிக்கணக்கில் வரவு - கட்சிக்காரர்களுக்கு. கட்சி காண்ட்ராக்டர்களுக்கு. வாழ்க தமிழ்!

● ஆர்.இருதயராஜ், திருபுவனம்.

*? தமிழக முதல்வரின் 56வது பிறந்ததின விழா பற்றி...?*

! என்ன செலவு பண்ணி, என்ன கட் அவுட் வைத்து, எத்தனை கவியரங்கம் வைத்து, சினிமா பாடல்களால் எத்தனை செவிப் பறைகளைக் கிழித்து, எத்தனை முழுப்பக்க விளம்பரங்கள் கொடுத்து என்ன? பீகார் முதல்வரைப் பாருங்கள், ''ஹனுமான் சாலிஸா'' மாதிரி ''லல்லு சாலிஸா'' வெளி விட்டிருக்கிறார்கள்!

அதில் ஒரு சாம்பிள்: ''இந்தியாவில் எத்தனையோ முதல்வர்கள் இருக்கிறார்கள். ஆனால் லல்லு மாதிரி இன்னொருவர் பிறந்ததுண்டா?'' - எப்படி!

● எஸ்.வி.பார்த்தசாரதி, திருச்சி.

*? நியூசிலாந்து தொடருக்கு அசாருத்தின் காப்டன் ஆனது குறித்து?*

! ஹீரோ கோப்பை, ஸ்ரீலங்கா வெற்றியைத் தொடர்ந்து ஹாட்ரிக் போடட்டும்!

● மு.மதிவாணன், அருர்.

*? ''நாட்டைக் குட்டிச் சுவராக்கியவர்கள் சினிமா நடிகர்கள்தான்'' என்கிறாரே, ராமதாஸ்?*

! ஐயோ, அநியாயம்! மன்சூர் அலிகானைப் பக்கத்தில் வைத்துக் கொண்டா இப்படி பேசுவது!

● எஸ்.பாலாஜி, ஏழுகிணறு

*? பள்ளி, கல்லூரிகளில் ராகிங் செய்வதைத் தடுக்கச் சட்டம் வரப்போகிறதாமே?*

! வரட்டும், வரவேற்போம்.

* ராஜாராஜன் பரிசு!



# 'ஜெ' பிறந்தநாள் விழா பற்றி...?



* பிறந்த நாள்...

● ஆர்.ஏ.வளர்மதி, கொடிமங்கலம்.

*? பாகிஸ்தானை எச்சரித்துப் பார்லிமெண்டில் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்களே, என்ன பலன்?*

! நாடாளுமன்றம் மொத்தமும் கட்சி வேறுபாடின்றி, ஒருமித்த கண்டனத் தீர்மானம் நிறைவேற்றியது இந்நாட்டினரின் மன நிலையை பாக்.குக்கு நிச்சயம் உணர்த்தும். அந்த அளவில் பலன் உண்டு.

● தென்றல் கார்த்தி, நாட்டரசன் கோட்டை.

*? வாழப்பாடி மீது எஸ்.டி.எஸ். அவதூறு வழக்குத் தொடர்ந்துள்ளாரே?*

! வாழப்பாடி அதை வரவேற்றுள்ளாரே!

● எஸ்.குமார், காரைக்குடி.

*? ப.சிதம்பரம், அஜீத்சிங் - இருவரில் அடுத்த மந்திரி யார்?*

! யானை குட்டி போடப் போகிறது என்று எதிர்ப்பார்த்தோம். இரண்டு பூனைக் குட்டிகள்தான் கண்டோம். பிரதமரின் அடுத்த மந்திரி சபை விரிவாக்க முயற்சிக்கு முன்னதாக அடுத்த தேர்தலே வந்து விடக் கூடும்!

● அ.மா.பழனிச்சாமி, கோவை.

*? மராட்டிய மாநிலத்தில் மனவளர்ச்சி குன்றிய பெண்கள் இருபது பேருக்கு கர்ப்பப்பை நீக்கி அறுவைச் சிகிச்சை அளித்தது குறித்து?*



* ...இயலுக்கும்தான்!

! தங்களைத் தாங்களே சுகாதாரத்துடன் கவனித்துக் கொள்ள முடியாத நிலையில், கயவர்களின் கொடுமையிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளத் தெரியாத நிலையில், இந்த அறுவைச் சிகிச்சை நியாயப்படுத்தப்படுகிறது. ஆனால் ஒவ்வொரு கேஸையும் தனித்தனியே பார்த்துத் தேவையை நிர்ணயிக்க வேண்டுமே தவிர, ஒட்டுமொத்தமாக அத்தனை பேருக்கும் ஒரே சமயத்தில் அறுவை செய்வது ஹிட்லரை நினைவூட்டுகிறது.

● வை.ஆனந்தராஜ், அம்பத்தூர்.

*? சமீபத்தில் தங்களைக் கண் கலங்க வைத்த சம்பவம்?*

**நீங்கள் கேட்டவை - தராசு**

● முழு பட்டினி!



● எப்போது மெய்.கோ?



! தொழுகையிலிருந்த ஐம்பது பாலஸ்தீனி யர்களை மிருகத்தனமாகச் சுட்டுத் தள்ளி... ஒரு யூதனின் அறிவு பிசகிய வெறிச் செயல் பெரும் இனக் கலவரமாக மாற அனுமதிக் காமல், இரு தரப்பினரும் கட்டுப்பாட் டோடு இருக்கட்டும். வெண்ணெய் திரளும் போது தாழி உடைய அனுமதிக்கக் கூடாது.

● நவவானதி, சென்னை

? 'விலைவாசி உயர்வைச் சமாளிக்க இரவுச் சாப்பாட்டைக் கை விடுங்கள்' என்று கேரள முதல்வர் கருணாகரன் கூறியிருக்கிறாரே?

! சமீபத்திய விலைவாசி உயர்வுக்கு ஒரு வேளையல்ல; மூன்று வேளை உணவை யுமே கைவிட வேண்டியதுதான். கருணா கரன், எடுத்துக்காட்டாகத் திகழ்ந்து வழி காட்டட்டும்!

● வி.கே.பிள்ளை, திருபுவனம்.

? 'எத்தனை நாள் ஆங்கிலத்தை நீடிக்கச் செய்வது?'' என்று கேட்கிறார் அர்ஜுன்சிங். ஏன், பீகாரிகள் கன்னடத்தை இணைப்பு மொழியாக ஏற்பார்களா?

! இந்த வம்பு தும்பு வேண்டாம் என் பதற்காகத்தான் 'ஆங்கிலமே நீடிக்கட்டும்' என்பது. 'நேருஜியின் உறுதி மொழி அர சியல் சாசனத்தில் இடம் பெற வேண்டும்' என்றும் வற்புறுத்துவது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி

? கணவன் மனைவி உறவு எப்படி இருக்க வேண்டும்?

! ஜெ - சென்னா; கலைஞர் - வை.கோ.; இளையராஜா - வைரமுத்து... இப்படியெல் லாம் இருக்கக் கூடாது!

● ஆர். சங்கரநாராயணன். குணசீலம்.

? ஐம்பதைத் தொட்டுவிட்ட கல்கி, இன்னும் இளமை குறையாதிருப்பதன் மர்மம் என்ன?

! ஹச்!ஹச்! சீக்கிரமா ரெண்டு கோல் டாரின் வாங்கி வாப்பா!

● கே.குமார், சீர்காழி.

? 'கட்சியும் கொடியும் போதும்' என்றார் முன்பு. இப்போது மறுபடி, 'அண்ணா அறிவாலயத்தை மீட்போம்' என்கிறார் வை.கோ. - ஏன் இப்படி?

! வை.கோ., எப்போது மெய்.கோ; எப் போது பொய்.கோ என்று கணிக்க முடியா துங்க.

● கே.ஆர்.சுந்தரராஜன், கும்பகோணம்.

? ''உலகத் தமிழ் மாநாடு நடத்துவதன் மூலம் முதல்வரின் புகழ் உலகெல்லாம் பரவும்'' என்று அவ்வை நடராசன் கூறுவதிலிருந்து என்ன தெரிகிறது?

! உலகத் தமிழ் மாநாடாக அது நடக்காது; 'ஜெ' ரசிகர் மன்ற மாநாடாகத்தான் விளங் கும் என்று தெரிகிறது.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

''கபில்தேவ் சாதனையை முறியடிக்க வாருங் கள்'' என்று ஹேட்லிக்கு இம்ரான் அழைப்பு விடுத்திருக்கிறாரே?

! அதுதான் ஐயா, 'பாகிஸ்தான் வேலை' என்பது!

● ப.கணேஷ் ராகவன், சென்னை.

? ''ஜெயலலிதாவுக்கு நோபெல் பரிசு வழங்க வேண்டும்'' என்று இந்திர குமாரி வேண்டுகோள் விடுத்துள்ளாரே?

! அது கிடைக்கிறதோ இல்லையோ, இத்தனை மேலான யோசனை சொன்ன தற்காக இந்திரகுமாரிக்கு ஒரு ராஜராஜன் பரிசையாவது 'ஜெ' வழங்கலாம்!

● பாலசுப்பிரமணியன், செங்குன்றம்.

? 'போலீஸ் ஸ்டேஷனில் பெண்கள் மானபங் கம்' என்ற செய்திகளுக்கு முற்றுப் புள்ளியே கிடையாதா?

! கடைசியாக ஒரத்தநாடு சம்பவம். மன முடைந்த கணவன் தற்கொலை. போலீஸ் உயர் அதிகாரிகள் உடனே கடுமையான நடவடிக்கை எடுப்பதற்குப் பதில், தங்கள் இலாக்காவுக்கு களங்கம் ஏற்படும் என்று அஞ்சி, மூடி மறைத்து, மழுப்ப முற்படும் வரை இந்தக் கொடுமை தொடரும். வழக்குத் தொடர்ந்து வெற்றிபெறுவது என் பது ஏழைபாழைகள் எல்லோராலும் முடி யாது. ஒரு பெண்மணி முதல்வராக இருக் கிறார்; என்ன நடவடிக்கைக்கு உத்தரவிட் டிருக்கிறார்?

● வே.முருகேசன், சென்னை-4.

? ஜ.வி.சீரியல்களைப் பார்க்கும் போது என்ன நினைப்பீர்கள்?

! ஒரு நிகழ்ச்சியில் சூதாட்டம் போல் சக்க ரம் சுற்றப்படுகிறது; இன்னொரு நிகழ்ச்சி யில் 'தம் மாரோ தம்' என்றும் கடவுள் பெயரைச் சொல்லியும் பாடிக் கொண்டே கஞ்சா அடிப்பது காட்டப்படுகிறது. ஆபா சத்துக்கோ அளவேயில்லை. நாட்டைக் கெடுக்க டீவி ஒன்றே போதும்!

☐ ரூ.25 பரிசு பெறுபவர்:
அ.மா.பழனிச்சாமி,
28, பாரதியவங்கி சாலை
கோவை-641018.

# ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனங்கள்

(வழங்குவோர்: திருமலை–திருப்பதி தேவஸ்தானம்)





பாடியுள்ளவர்: சங்கித கலாநிதி

## திருமதி. எம். எஸ். சுப்புலக்ஷ்மி



காசட் எண்: TPHVS-847538

விலை: ரூ. 29/-

(எல்லா வரிகள் உள்பட)

அனைத்து HMV ஆடியோ
காசட் டீலர்களிடமும் கிடைக்கும்.

RPG ENTERPRISES

HMV

CCC/HMV/TM/2019

# முகமூடி எதற்கு?

◆ "தீட்சிதர்கள் ராஜாங்கம்" கவர் ஸ்டோரி எப்படி எழுத வேண்டும் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக, மிகவும் சிறப்பாக எழுதப்பட்டிருந்தது. சரியான கண்ணோட்டம், விருப்பு வெறுப்பற்ற அலசல், நல்ல சொற்பிரயோகம், தீர்மானமான கருத்துக்கள் என்று அசத்தி விட்டார். அவருக்கு "நமது நிருபர்" என்ற முகமூடி அவசியம் தானா? நிஜப் பெயரிலேயே எழுதலாமே!

சென்னை-61, க. ச. சேகர்.

◆ சிதம்பரம் கோவில் தனியார் துறை நிறுவனம்போல் நடக்கும் சிறிய ஒழுங்கான சக்தி மையம். உண்டியல் இல்லை. கைடுகள் கிடையாது. டூரிஸ்ட் பஸ்கள் 20 - 30 என்று வந்தாலும் பக்தர்களுக்கு நுழைவுக் கட்டணமோ, தரிசனக் கட்டணமோ கிடையாது. குத்தகைதாரர் தரும் பொருட்களால் விழாக்கள் நடக்கின்றன. தீட்சிதர்கள் யாத்ரிகர் கும்பலை அணுகி, 'அர்ச்சனை செய், அதை இதைக் காட்டுகிறேன்' என்று மேலே விழுந்து பிடுங்க மாட்டார்கள். யாத்ரிகரின் பெயர், நக்ஷத்திரத்திற்குக் கட்டளைகள் உண்மையாக நடக்கின்றன.

காரைக்குடி, டி.வி.கிருஷ்ணமூர்த்தி.

◆ ஒரு காலத்தில் தில்லை மூவாயிரவர் இன்று 285 பேராகத் தேய்ந்துபோன நிலைக்குக் காரணம் என்ன? அரசர்கள் சிதம்பரம் கோவிலுக்கு எழுதி வைத்த நஞ்சை புஞ்சைகளெல்லாம் என்னவாயின? விபூதி குங்குமத்திற்குக் காசு கேட்கும் அளவிற்குக் அக்கோவில் அர்ச்சகர்கள் விரட்டப்பட்டதற்குக் காரணம் என்ன? மற்ற சிவ, விஷ்ணு தலங்களில் "சிறப்பு வழி" என்று கட்டணம் வசூலிக்கப்படுவதுபோல் அங்கு நடக்கிறதா? 'ஏகாதிபத்திய நிர்வாகம்' என்று குறிப்பிடும் தங்கள் கண்களில் இந்து அற நிலைய நிர்வாகத்தின் கீழ் நடக்கும் கோவில்களில், அரசியல் கெடுபிடி, சிலைத் திருட்டு, தரிசனத்துக்குக் கட்டணம் வசூல் போன்ற அக்கிரமங்கள் நடப்பது தென்படவில்லையா?

ஸ்ரீரங்கம், டி.எஸ்.ஜெயராமன்.

◆ நடராஜர் ஆலயத்திற்குள்ளேயே கோவிந்தராஜப் பெருமாள் என்றொரு ஆழ்வார்களால் பாடப் பெற்ற, புகழ்பெற்ற வைணவத்தலம் இருப்பதைப் பற்றி எழுதாமல் விட்டிருப்பது வருந்தத் தக்க விஷயம்.

அம்மாபேட்டை, ஜெ.ராமானுஜம்.

◆ "கோவில் இல்லாத ஊர்" கட்டுரை போல் இனிமேல் வெளியிட வேண்டாம். இதுபோல் எல்லா இடங்களிலும் கோவிலை மூடி, இந்து மத சம்பிரதாயங்களை விட்டுவிட வேண்டும் என்று மக்களுக்குத் தெரிவிக்கிறீர்களா அல்லது இது போன்று நடந்து கொள்ள வேண்டாம் என்ற நோக்கத்தில் வெளியிட்டுள்ளீர்களா எனத் தெரியவில்லை!

ராசிபுரம், வி.காமராஜ்.

◆ பக்தி மார்க்கம் தழைத்தோங்கும் சிதம்பரத்தில் பகுத்தறிவு வேட்கையுடன் ஒரு முழுக் கிராமம் என்று அறியும்போது வியப்பு மேலிடுகிறது. இதற்குக் காரணம் சிதம்பர நகர கோவில் நிர்வாகத்தினரின் ஏகாதிபத்தியம்தான் என்று கூறும்போது, தீட்சிதர்களின் ராஜாங்கம் புரிகிறது. கிராமத்தினரின் படிப்பறிவு ஆர்வம் மனநிறைவளிக்கிறது.

திருச்சி, ஷ்யாம்கண்ணன்.

◆ அந்த அந்த ஊர்களின் தேவைகளை நிறைவேற்ற கல்வி செய்துவரும் சமூக சேவை பாராட்டுக்குரியது.

பெரியகுளம், சிதம்பர சூரிய நாராயணன்.

◆ பிஞ்சு உள்ளங்களின் கள்ளம் கபடம் அறியா குணத்தைக் கடைசியில் காட்டியிருந்தாலும் கூட, புனிதப் பணி செய்யும் ஆசிரிய பெருந்தகைகளின் நன்மதிப்பைக் குறைக்கும் விதத்தில் அமைந்த 'சிங்கப்பூர் காசு' போன்ற கதைகளைத் தங்கள் இதழில் வெளியிட வேண்டாம்.

வடகரை, பாலு.

◆ ஆசிரியர்கள் எப்படி இருக்கக் கூடாது; மாணவ, மாணவியர் எப்படி இருக்க வேண்டும் என்பதை மிகவும் அழகாக உணர்த்திய சிங்கப்பூர் காசு மிகவும் மதிப்புள்ளதாக இருந்தது.

திருச்சி, ஆர்.கே.ராஜப்பிரியன்.

◆ சிதம்பரத்துக்காரர் ஆர்னிகா நாசரின் "சிதம்பர ரகசியம்" அறிவியல் வளர்ச்சியை படம் பிடித்துக் காட்டிய இனிக்கும் கதை... பாராட்டுக்கள்.

திருவண்ணாமலை, என். சண்முகம்.

◆ கதையில் 'Obsessive Compulsive Disorder' என எழுதியிருந்தேன். Disorder ல் 'DIS' விட்டுப் போய் விட்டது. விஞ்ஞானக் கதையில் தவறாக வியாதியின் பெயரை எழுதிவிட்டேன் என்பார்கள். தயவு செய்து திருத்தம் வெளியிடவும்.

அண்ணாமலை நகர், ஆர்னிகா நாசர்.

◆ "புரட்சித் தலைவிக்கு ஓர் எச்சரிக்கை' என்ற தலைப்பில், தமிழகத்திலுள்ள 3000 கைவண்டி மண்ணெண்ணெய் வியாபாரிகளின் உரிமங்களை உயிர்நாடியாகக் கொண்டு வாழும் 15,000 ஆத்மாக்களின் வாழ்வுக்கு வழி தந்த உயர்நீதி மன்ற ஆணையினை வரவேற்று வாழ்த்தி வரைந்த தங்களின் தலையங்கத்துக்கு எங்களது இதயம் பூரித்த நன்றி.

குடந்தை, ரா.நந்தகோபால்.

◆ 'அடுத்த நூற்றாண்டை நோக்கும் அண்ணாமலை மாணவர்' பற்றிய இலவச இணைப்பு பயன் உள்ளதாக இருந்தது. பாராட்டுக்கள்.

கொளப்பாடு, த.இளஞ்சேரன்.



# ஜோதிபாசுவும் நரிகளின் கச்சேரியும்!

ஜோதிபாசு வசிக்கும் சால்ட்லேக் பகுதியில் 'சென்ட்ரல் பார்க்' என்ற சிறு காடு ஒன்று உண்டு. காட்டிலாகாவின் வசத்திலுள்ள இந்தப் பார்க் ஒரு சரணாலயம். இங்கு வசிக்கும் விலங்குகளையும் பறவைகளையும் யாரும் கொல்லக் கூடாது.

இந்தப் பார்க்கில் வசிக்கும் நரிகள் சிறிது காலமாக ஒவ்வோரிரவும் 'இசை'க் கச்சேரி நடத்தத் தொடங்கி விட்டன. ஜோதி பாசுவின் தூக்கம் கெட, அவர் போலீஸ் இலாகாவுக்குப் புகார் செய்தார். சில போலீஸ்காரர்கள் அங்கு போய்ச் சில நரிகளை அடித்துக் கொன்று விட்டார்கள். அவர்களால் அடிக்கப்பட்டுக் காயமடைந்த நரியொன்று கர்ப்பமாயிருந்ததாம். அடிபட்ட அதிர்ச்சியில் அது பிரசவிக்க, அதன் குட்டிகளில் இரண்டு, பிறக்கும் போதே இறந்து விட்டன.

இந்த நிகழ்ச்சி விலங்கு நேயர்களுக்கும் சுற்றுப்புறத் தூய்மை வாதிகளுக்கும் ஆத்திரமூட்டியிருக்கிறது. அவர்கள் போலீசாரின் நடத்தையைக் கடுமையாகக் கண்டித்திருக்கிறார்கள். ஜோதிபாசுவின் அரசைத் தாக்க எப்போதும் தயாராயிருக்கும் காங்கிரஸின் தீப்புயலான மம்தா பானர்ஜி, இந்த வாய்ப்பை நழுவவிடுவாரா? ரகளை பண்ணிக் கொண்டிருக்கிறார்.

நரிகளுக்கு அரசியல் ஆதரவு கிடைத்து விட்டது. இனி ஜோதிபாசு நரிகளின் 'இசை'யைத் தாலாட்டாகப் பாவித்துத் தூங்கப் பழக வேண்டும்!

## அடுத்ததாக அரசியல் கச்சேரி!

மேற்கு வங்க அரசின் அமைச்சர் ஜதீன் சக்கரவர்த்தி, ஜோதி பாசுவுக்கு எதிராகப் புகார் செய்ததால் மந்திரி சபையிலிருந்து விலக்கப்பட்டுப் பிறகு தம் கட்சியான R.S.P. யிலிருந்தும் வெளியேற்றப் பட்டார். பொழுது போக வேண்டுமே! ஆகவே, நூற்றாண்டு நிறைவு பெற்றுள்ள அவரது அபிமானக் கால்பந்து கோஷ்டியான மோகன் பாகானைப் புகழ்ந்து ஒரு பாட்டெழுதிக் காசெட்டில் பதிவு செய்திருக்கிறார். இந்தப் பாட்டு 'ஹிட்' ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கெதிராகப் பாட்டுகள் அமைத்துப் பாடப் போகிறாராம்.

ஜோதிபாசு ஒருவேளை நரிகளின் 'இசை'யிலிருந்து தப்பித்துக் கொண்டாலும் ஜதீன் சக்கரவர்த்தியின் இசைத் தாக்குதலிலிருந்து தப்பவே முடியாது போலிருக்கிறது.

கல்கத்தாவிலிருந்து :
சு. கிருஷ்ணமூர்த்தி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

## வீட்டைக் கட்டிப்பார்!

# கனகவல்லி கட்டிய வீடு

ஸ்ரீராம ஜெயம்

எல்லாம் வல்ல இறைவன் அருளாலும் பெரியோர்களின் நிறைவான ஆசிகளாலும், நிகழும் ஸ்ரீமுக ஆண்டு, பங்குனி மாதம் பதினெட்டாம் தேதி (31.3.94) 303, நாலாவது குறுக்குத் தெரு, குமரன் காலனி, சென்னை என்ற முகவரியில் எங்களது புதுமனை புகு விழா நடக்கவுள்ளது. காலை 8 மணி முதல் 9 மணி வரை நடைபெறும் இவ் விழாவில் தாங்கள் குடும்பத்துடன் கலந்து கொண்டு விருந்துண்டு எங்களை ஆசிர்வதிக்க வேண்டும் எனப் பணிவன்புடன் கோருகிறோம்.

இப்படிக்கு,
கனகவல்லி திருமலைசாமி
சி.என். திருமலைசாமி.

- மேற்படி அழைப்பிதழில் திருமலைசாமி தம்பதியின் பெயருக்குப் பதிலாக உங்கள் பெயரைப் போட்டுப் பாருங்கள்... என்ன இனிமையான கற்பனை...! இந்த கற்பனை நிஜமாவதற்கு முன் பல கஷ்டங்களைக் கடந்து வர வேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

கனகவல்லி-திருமலைசாமி வீடு கட்டிய வரலாற்றைத் தெரிந்து வைத்துக் கொண்டால் தக்க சமயத்தில் அது கை கொடுக்கும்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை கலை கனகவல்லி காப்பியை நீட்டியபடி ஆரம்பித்தாள்.

''என்னங்க, நம்ம கையில சேர்ந்துருக்கிற பணத்தையெல்லாம் சேர்த்துப் போட்டு கொஞ்சம் கடனும் வாங்கி எப்படியாவது ஒரு வீட்டைக் கட்டிடணும்...''

''ஏன் உனக்கு இந்த ஆசை! மொத்த பணத்தையும் எஃப்.டில போட்டா, வர்ற வட்டில வாடகை குடுத்துட்டு, வீட்டுச் செலவுக்கும் மிச்சம் வைச்சுக்கலாம்...''

''ஹைஹூம்! இன்னும் எத்தனை நாளைக்கு அது முடியும்? ஆறு மாசம் ஒரு வருஷம் போனா வீட்டுக்காரர் வாடகையை ஏத்தப் போறார்; அவர் மகளுக்குக் கல்யாணம் செய்ஞ்சு இந்த வீட்லதான் குடித்தனம் வைக்கப் போறதா வேற சொல்றாங்க... என்னிக்குக் காலி பண்ணச் சொல்வாங்களோ தெரியாது...''

''இக்கட்டு வரும்போது பார்த்துக்கலாம்...''

''இதுதான் உங்க கிட்டே எனக்குப் பிடிக்காத விஷயம்...'' என்று கனகவல்லி முகச் சுளிப்புடன் ஆரம்பித்து, தங்கள் வயதுக்காரர்கள் யார் யார் சொந்த வீடு கட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்று பட்டியலிட்டு, கம்பெனியில் லோன் போடலாம் என்று உற்

சி.எச். கோபிநாத் ராவ்

சாகம் தந்து, இனி பத்து வருஷம் தீபாவளிக்கு பட்டு வாங்குவதில்லை என்று உத்தரவாதமும் தந்து, மகள் கமலியின் கல்யாண சமயத்தில் எப்படி வீட்டை விற்று, 'கிராண்டா'க் கல்யாணமும் பண்ணி ஒரு சின்ன ஃப்ளாட்டும் வாங்கிடலாம் என்று கற்பனையில் இறங்கி.... ''நமக்குன்னு ஒரு குடிசையாக்கம் சொந்தமா இருக்கணுங்க...'' என்று தழுதழுத்த போது... திருமலைசாமி, மனைவியின் கைகளைச் சமாதானமாகப் பற்றிக் கொண்டு, ''சரி சரி....'' என்று தலையசைத்துக் கொண்டிருந்தார்.

'கார்னர் பிளாட்'தான் மிகவும் வசதி என்று கேள்விப்பட்டு, குமரன் நகரில் ஒரு கார்னர் பிளாட் பார்த்து வந்தார்கள் திருமலைசாமியும் கனகவல்லியும். எதற்கும் இரண்டாவது கருத்துக் கேட்பது நல்லது என்று ஆர்கிடெக்ட் ஆனந்தமூர்த்தியிடம் சென்றார்கள். அவர் சைட் பிளானைப் பார்த்து விட்டு ஆதியோடு அந்தமாக விசாரிக்க ஆரம்பித்தார்.

''இந்த இடம் வீடு கட்டும் உபயோகத்துக்காக (எம்.எம்.டி.யேவால்) ஒதுக்கப்பட்டிருக்கா? லே அவுட்டைச் சட்டப்படி பிரிச்சிருக்காங்களா? MMDA அல்லது DTP - அதாவது Town Planning அமைப்பிடம் ரியல் எஸ்டேட்காரர் சமர்ப்பித்த மனைகளின் சைட் பிளான் வரைபடமும் உங்களுக்குக் காட்டிய வரைபடமும் ஒத்து போகின்றனவா?''

''கொஞ்சம் பொறுங்க... ஏதோ நம்பிக்கையின் பேர்லதான் நிலம் வாங்கறோம்...''

''அப்படி செய்தா அப்புறம் நீங்க வருத்தப்பட நேரிடும். உதாரணமா, விவசாய நிலம்னு ஒதுக்கப்பட்ட இடத்துல வீட்டு கட்டறது குற்றம். வீட்டு மனைக்கான நிலமானாலும் அதை பிளாட்டாகப் பிரிக்கும்போது சில விதிமுறைகள்படிதான் பிரிக்கணும். அப்படிச் செய்யலைன்னா பின்னால நிலச் சொந்தக்காரருக்குத்தான் பிரச்னை வரும்.... இதையெல்லாம் விசாரியுங்க...''


சி.எச். கோபிநாத் ராவ், கட்டடக் கலை நிபுணர். அக்கலை குறித்த நூல்கள் பல எழுதியிருக்கிறார். (படம் : கோபிநாத்.)

''சரி அப்ப, நாங்க சரியா கேட்டுக்கிட்டு வர்றோம்...''

''பொறுங்க பொறுங்க! இந்த மனையை அரசாங்கமோ நகராட்சியோ ஏதாவது பொதுக் காரியத்துக்காகக் கையகப்படுத்தறதுக்கான வாய்ப்பு இருக்கான்றதையும் விசாரியுங்க...''

''ம்.....''

''அப்புறம் பத்திரம் - வில்லங்கம் இல்லாம இருக்குன்னு பதிவாளர் அலுவலகத்துலேயிருந்து சர்டிஃபிகேட் வாங்கணும் - இல்லாவிட்டால் நிலத்தோட முந்தைய உரிமையாளர் அதன் பேர்ல கடன் உடன் வாங்கியிருந்தா அதுனால நீங்க பாதிக்கப்படுவீங்க... தவிர நகர்ப்புற நில உச்ச வரம்புச் சட்டம்னு இருக்கு. இதன் கீழ் வர நிலத்தை அரசாங்கம் எடுத்துக்கும். சிலர் அந்த மாதிரி நிலத்தை ஏமாந்தவங்க கிட்ட வித்துடுவாங்க...''

''ஐயய்யோ!''

''அப்படி தெரியாம வாங்கிட்டீங்கன்னா அந்த மனைய உங்ககிட்டேருந்து அரசாங்கம் வலுக்கட்டாயமா பறிமுதல் பண்ணிடுவாங்க.''

''இதையெல்லாம் கேட்டா, பேசாம நிம்மதியா ஒரு ஃப்ளாட் வாங்கிடலாம் போல இருக்கே....''

''அதுக்குள்ள சோர்ந்துட்டா எப்படி....? இப்பத்தானே ஆரம்பிச்சிருக்கீங்க.... வீடு சம்பந்தமா எந்த முக்கியமான முடிவு எடுக்கறதானாலும் விஷயம் தெரிஞ்ச ஒருத்தரைக் கேட்டுச் செய்யறதுன்னு கொள்கை வச்சுக்குங்க. அதுவே உங்களுக்குப் பெரிய பாதுகாப்பு...''

''சரிங்க, அப்படியே செய்யறோம். விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிட்டுத் திரும்ப வர்றோம்...''

''ஒரு நிமிஷம்... கார்னர் பிளாட் நல்லதுன்னு பல பேர் சொல்லியிருப்பாங்க; ஆனா அதுலயும் ஒரு சிக்கல் இருக்கு.... மனைக்கு இரண்டு பக்கங்கள் ரோடு வர்றதால, ரோடின் அகலத்தைப் பொறுத்து நீங்க இரண்டு பக்கமும் இடம் விட்டுத்தான் வீடு கட்ட முடியும். இதுனால வீட்டு ஏரியாவை நீங்க குறைக்க வேண்டி வரலாம். அதோட, இரண்டு வீதி கூடுற முனையில, கொஞ்சம் கூடுதல் நிலத்தை நீங்க சாலைக்காக விடணும். இதை splay' ன்னு சொல்லுவாங்க. அதனால் கார்னர் பிளாட்டைத் தவிர்த்துடறது

நல்லது. இன்னொரு விஷயத்தையும் ஞாபகம் வைச்சுக்குங்க. ரோடு முனையிலிருந்து பின்பக்க எல்லை வரைக்கும் உள்ள தூரத்தைப் பொறுத்து வீட்டின் பின் பக்கமும் நீங்க இடம் விடணும் - இந்த தூரம் ஐம்பதடி இருந்தா அஞ்சடி இடம் விடணும். அதே ஐம்பத்தோரு அடியாயிட்டா பத்தடி விட வேண்டியிருக்கும்... ஒரு அடி கூட கிடைக்குதுன்னு பார்க்கப் போயி அஞ்சடிய இழந்துடுவீங்க!''

''விவரம் தெரிஞ்சவங்க பிரிச்சா, இதுமாதிரி பிரிக்க மாட்டாங்க இல்லையா....''

''ஆங்! அதுதான் சொல்ல வர்றேன். உங்களுக்கு நிலம் விற்கற பார்ட்டி நம்பிக்கையான பார்ட்டியா இருக்கணும். உங்களுக்கும் விஷயம் தெரிஞ்சிருக்கணும்...''




ஆனந்த மூர்த்தி வீட்டிலிருந்து வெளியேறிய திருமலைசாமி - கனகவல்லி நேராக சோடா கடைக்குள் நுழைந்தார்கள்!

கார்னர் பிளாட் வேண்டாமென்று முடிவாகியது. ஆனந்தமூர்த்தி சொன்னவற்றையெல்லாம் விசாரித்து உறுதிப் படுத்திக் கொண்டு, ஒரு நல்ல நாளில் பிளாட் வாங்கிப் பதிவு செய்தார்கள். இதற்குள் வடகிழக்குப் பருவ மழை பிடித்துக் கொள்ள, வீடு கட்டும் வேலையை முழுசாக கான்டிராக்ட் விடுவதா, லேபர் கான்ட்ராக்ட் விடுவதா, ஆர்கிடெக்ட் - கான்ட்ராக்டர் என இருவர் உதவியுடனும் செய்வதா என்று யோசிப்பதில் இரண்டு மாதங்கள் பறந்தன.

கனகவல்லி ஒரு காகிதத்தில் கச்சிதமாக அனுகூல/பிரதிகூலங்களை எழுதியே வைத்துவிட்டார்.

| | அனுகூலம் | பிரதிகூலம் |
|---|---|---|
| முழு கான்ட்ராக்ட் | ● நமக்குத் தொல்லை குறைவு. மேற்பார்வை மட்டும் பார்த்தால் போதும். ● அதிகம் லீவு போட வேண்டாம். ● காலக் கெடுவையும் செலவுகளையும் ஒப்பந்தத்தில் தெளிவாகத் தெரிவித்துவிடலாம். | ● கான்ட்ராக்டர் வாங்கும் பொருள்களின் தரம் எப்படி இருக்குமோ? ● அடிக்கடி முன் பணம் கேட்டுத் தொந்தரவு செய்தால் சமாளிக்க வேண்டும். |
| லேபர் கான்ட்ராக்ட் (அதாவது தேவையான பொருட்களை நாமே வாங்கி சப்ளை செய்து - உழைப்புக்கு மட்டும் கான்ட்ராக்ட் விடுதல்) | ● பொருள்களின் தரத்துக்கு நாமே உத்தரவாதம். ● இதனால் செலவு குறையும் - நிச்சயமாக. | ● நேரமும் சிரமும் கூடுதலாகும். அதிகமாய் லீவ் எடுக்கணும். ● நாம் வாங்கும் பொருட்கள் சொத்தை சொள்ளை என்று கான்ட்ராக்டர் குறை சொல்லலாம். |
| ஆர்கிடெக்ட் - கான்ட்ராக்டர் காம்பினேஷன் | ● வீடு வடிவமைப்பு ஆர்கிடெக்ட் செய்வதால் நிச்சயமாய் அழகாய் இருக்கும். ● இரண்டு நிபுணர்களின் ஈடுபாடு ஆதாயம் தானே. | ● செலவு அதிகரிக்கும். ● இரண்டு நிபுணர்களுக்கிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டால் நாம் தொலைந்தோம்! |

நீண்ட நெடும் யோசனைக்குப் பிறகு ஆர்கிடெக்ட் - காண்ட்ராக்டர் ஜோடியிடம் பொறுப்பை ஒப்படைக்க முடிவாகியது. ஆர்கிடெக்ட் ஆனந்தமூர்த்தி; காண்ட்ராக்டர் : கே.ஏ. காமேகவரன்.

வீடு கட்டப்படவிருந்த நிலத்தை வந்து பார்த்தார் ஆனந்தமூர்த்தி. ''நல்ல காலமாய் பலா, புளி அரசு மாதிரி மரங்களெதுவும் இல்லை... அப்படியிருந்தா அதை வேரோடு வெட்டிட்டு ஆறு மாசம் நிலத்தை ஆறப் போடணும். முதல்ல மண்ணு எடுக்கச் சொல்லுங்க... அப்புறம் அந்தத் தண்ணியை டெஸ்டிங்குக்கு அனுப்புங்க. கட்டடம் கட்ட அது லாயக்கான்னு பார்க்கணும்.''

காண்ட்ராக்டர் காமேகவரன் பூமியை ஆராய்ந்தார். ''மண்ணு நல்லாயிருக்கும்மா... அதிர்ஷ்டந்தான். இல்லாட்டி அஸ்திவார செலவே பத்து பர்சண்ட் அதிகமாகும்! களிமண் பூமியாயிருந்தா மழைக்கு மண்ணு விரிஞ்சு வெயிலுக்குச் சுருங்கும் - அது அவ்வளவா நல்லதில்லே...''

மனத்துக்குள் நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் கனகவல்லி. ''வேலையை எப்போ ஆரம்பிக்கலாம்?''

''முதல்ல பிளான் போட்டுத் தர்றேன். அதைக் காட்டி மாநகராட்சியில அப்ரூவல் வாங்கணும்'' என்றார் ஆனந்தமூர்த்தி.

ஒரு வாரத்தில் வந்து சேர்ந்த பிளான் இதுதான்: (எதிர்ப் பக்கத்தில் உள்ளது)

கனகவல்லி - திருமலைசாமி பட்ஜெட்டுக்கு ஏற்ப இரண்டு பெட்ரூம் வீட்டுக்கு வரைபடம் தந்தார் ஆனந்தமூர்த்தி. அதே படத்தில் பிற்காலத்தில் வீட்டைப் பெரிதுபடுத்தி எப்படி கட்டலாம் என்பதையும் காட்டியிருந்தார். கூடவே ஒரு குறிப்பு : 'வீட்டில் என்ன ஃபர்னிசர் வைக்கப் போகிறீர்கள் என்பதை யோசித்து, அதற்கேற்ப இந்த பிளான் சரிவருமா என்று பார்க்கவும். அவசியமானால் சிறு மாற்றங்கள் செய்து சௌகரியங்கள் கூட்டலாம்.'

''ஆமாம் நம்ம கிட்டே இருக்கிற நாலு மடக்கு சேரையும் ஒரு டேபிளையும் போட என்ன பெரிய யோசனை...'' என்று அலுத்துக் கொண்டாள் கனகவல்லி.

''அவங்க கடமை, அவங்க ஞாபகப்படுத்தறாங்க... கவலைப்படாதே; வீடு முடியறப்ப கையில காசு மிச்சமிருந்தா புது ஃபர்னிசர் வாங்கி...'' திருமலைசாமி சமாதானப்படுத்த, அடக்க முடியாமல் சிரித்தாள் கனகவல்லி.

கார்ப்பரேஷனின் ஒப்புதலுக்கு, உடனடி கட்டுமானப் பணிக்கான வரைபடத்தை மட்டுமே அனுப்பினார்கள்.

காமேகவரன் பிளானை வைத்துக் கொண்டு எஸ்டிமேட் தயாரித்தார். அஸ்திவாரத்துக்குக் கடைக்கால் எடுப்பது தொடங்கி, கதவுகளுக்குப் போட வேண்டிய காத்ரேஜ் பூட்டுகள் வரை தனித்தனியாக விலை போட்டு, செய்கூலி பிரித்து, அந்தந்த வேலைக்குத் தோராயமான காலக்கெடு நிர்ணயித்து விவரப்பட்டியல் தந்தார்.

கால்குலேட்டரை வைத்துக் கொண்டு தட்டித்தட்டி கணக்குகளைச் சரிபார்த்தார் திருமலைசாமி. இறுதித் தொகையை வீட்டின் பரப்பளவால் வகுத்து, சதுரடிக்கு ஆகும் செலவைக் கணக்கிட்டார். சமீபத்தில் வீடு கட்டிய, கட்டிக் கொண்டிருந்த நண்பர்கள் செய்த செலவுகளை ஒப்பு நோக்கினார். திருப்தியாக இருந்தது. நண்பர் ஒருவர் கார்ப்பரேஷனில் இருந்ததால் ஒப்புதலுக்கு அதிக சிரமமின்றி, தாமதமின்றிக் கிடைத்தது.

அஸ்திவாரத்துக்குக் கடைகால் எடுத்தாயிற்று. கம்பி கட்டி, பலகைகள் அண்டைக் கொடுத்து கான்க்ரீட் போடத் தயாரான நிலை - கிராமத்திலிருந்து வந்திருந்த கனகவல்லியின் அப்பா குடையைப் பிடித்துக் கொண்டு குனிந்து ஆராய்ந்து கொண்டிருந்தார்.

''மாப்பிள்ளை.... எத்தனை அகலத்துக்கு அஸ்திவாரம்....?''

''மூணடி மாமா....?''

''இது மூணடி இருக்குமா....?''

''ம்.....'' இஞ்ச் டேப் வைத்து பலகைக்கிடையே தூரத்தை அளந்து காண்பித்தார் திருமலைசாமி.

மாமனார் டேப்பை வாங்கி, அண்டை கொடுக்கப்பட்ட பலகைகளின் அடிப்பகுதிகளுக்கிடையேயான தூரத்தைக் கஷ்டப்பட்டு அளந்தார்.

''பரவால்லை மாப்பிள்ளை. சரியாயிருக்கு. சாதாரணமா இந்த விஷயத்துலதான் ஏமாத்துவாங்க. மூணடி அகலம் அஸ்திவாரம்னு சொல்லிட்டு அடிப்பக்கத்தைக் குறுக்கிடுவாங்க. அங்க 2¾ அடிதான் இருக்கும். கட்டடத்துக்கும் நல்லதில்லை, காசும்




வீனு...'' அவர் சொல்லி முடிப்பதற்கும் காண்ட்ராக்டர் காமேகவரன் அங்கு வந்து சேர்வதற்கும் சரியாக இருக்க, திருமலை சாமி தர்மசங்கடத்தில் நெளிந்தார்.

''மாமா, இவர்தான் பில்டிங் காண்ட்ராக்டர் மிஸ்டர் கே.ஏ. காமேகவரன்.''

''வணக்கம், வணக்கம்'' என்று அவசரமாகக் கும்பிடு போட்டுவிட்டு ஒரு பக்கமாக அடுக்கியிருந்த செங்கற்களைப் பார்க்க நடந்தார் மாமனார். வெடுக்கென்று ஒரு கல்லை எடுத்து இடுப்புயரத்திலிருந்து கீழே போட்டார். ''நல்லா வெந்த கல்லுதானான்னு பாத்தேன்.... பரவால்லை, உடையாம இருக்கே. நல்ல கல்லுதான்...'' மிகச் சாதாரணமாய் அவர் இன்னொரு கல்லை உருவிப் போட காமேகவரனின் முகம் செங்கல்லைக் காட்டிலும் சிவந்தது.

''மாமா, நான் ஆட்டோ புடிச்சுக்கிட்டு வரேன்...'' என்று அவசரமாய் இடத்தைக் காலி செய்தார் திருமலைசாமி.

ஆட்டோவில் ஏறுமுன் கட்டு வேலைக்கு வந்திருந்த மணலைக் கொஞ்சம் அள்ளிக் கொண்டார் மாமா. வலக் கை பெருவிரலுக்கும் ஆள்காட்டிவிரலுக்கும் இடையே ஒரு சிட்டிகை மணலை வைத்துத் தேய்த்து உதிர்த்தார். ''நல்ல மணலு, களிமண் கலப்பு இல்ல... இருந்தா விரல்ல ஒட்டி, கரை படியும்...'' என்றார்.

திருமலைசாமிக்கு 'அப்பாடா' என்றிருந்தது. ''இது வரைக்கும் எல்லா டெஸ்டும் பாஸ்!''

''மாப்பிள்ளை, மணலை தண்ணில போட்டுச் சோதனை பண்ணிப் பார்க்கறதும் உண்டு... உங்களுக்குத் தெரியுமோ என்னவோ; செங்கல்லைக் கூட இருபத்து நாலு மணி நேரம் தண்ணியில் ஊறப்போட்டு, எடை கூடாம இருக்கான்னு பார்ப்பாங்க. வீடு கட்டறதுக்கு உபயோகிக்கிற பொருள்களையெல்லாம் சோதிக்கப் பார்த்துச் சொல்றதுக்குத் தனி இடங்களே இருக்கு. இங்க மெட்ராஸ்ல அண்ணா யுனிவர்ஸிடிலயும் ஐ.ஐ.டிலயும் இருக்குன்னு சொல்றாங்க. அதோட டார்ஸ்கல் ரிசர்ச் ஃபவுன்டேஷன் மாதிரி சில தனியார் கம்பெனிகள்லயும் பண்றாங்க. உங்களுக்குத் தெரியாதா....?''

''தெரியாது மாமா....'' திருமலைசாமியின் குரல் சின்னதாக, கரத்தின்றி ஒலித்தது.

''உங்கப்பா ஒவ்வொரு செங்கல்லையா எடுத்து தோசை வெந்திருக்கான்னு உள்ளங்கையைக் கிள்ளி விளையாடற மாதிரி டெஸ்ட் பண்ணிட்டிருக்காரு. அவர் சொல்ற மாதிரி ஒவ்வொண்ணையும் டெஸ்ட் பண்ணி வீடு கட்டி முடிக்கறதுன்னா இன்னும் பத்து வருஷம் ஆகும்... அதுவும் காண்ட்ராக்டர் முன்னாலயே ஆயிரம் கேள்வி கேக்கறாரு. அந்தாளு நொந்து போய் ஓடிடுவார்....'' சிடு சிடுத்துக் கொண்டிருந்தார் திருமலைசாமி.

''அப்பா சொல்றதுல என்னங்க தப்பிருக்கு? பேசாம காண்ட்ராக்டர் கிட்டயே எல்லா மெடீரியல்லையும் முறையா டெஸ்ட் பண்ணிடச் சொல்லலாமில்ல?''

''அதை முன்னாடியே யோசிச்சு ஒப்பந்தத்துலயே சேர்த்திருக்கணும் - இப்பப் போய் திடீர்னு எப்படி கன்டிஷன் போடறது? மேலும் மனுஷனுக்கு மனுஷன் நம்பித் தான் எந்த வேலையும் செய்ய முடியும்.''

''சில சமயம் சந்தேகப்பட்டு சோதனை செய்யறதும் நல்லதுங்க...'' என்றபடி ஒரு சீட்டை நீட்டினாள் கனகவல்லி.

''இது என்ன?''

''அப்பா உங்ககிட்டே இதைக் குடுக்கச் சொல்லிட்டு ஊருக்குப் புறப்பட்டுப் போய்ட்டார்.''

திருமலைசாமி சீட்டைப் பிரித்தார். படித்தார்.

மாப்பிள்ளைக்கு,

ஆசிகள். கீழ்க்கண்ட வகையில் கான்க்ரீட் கலவைகள் போடுகிறார்களா என்பதைக் கட்டாயம், கண்டிப்பாய், தவறாமல் சரி பார்க்கவும். கான்க்ரீட்டையும் கலவையையும் பாண்டில் அளந்து கொட்டிக் கலப்பார்கள். அது சரியில்லை. அதற்கென்று உள்ள மரப்பெட்டியில் அளந்துதான் கலக்க வேணும். இதை வலியுறுத்த வேண்டியது

உங்கள் பொறுப்பு.

| | |
|---|---|
| கம்பி கட்டிய re-inforced காங்கிரீட் : (கூரை, லின்டல், சன்ஷேட்) | சிமெண்ட் மணல் கருங்கல் ஜல்லி 1 : 2 : 4 |
| கட்டு வேலை - செங்கல் சுவர் etc.... : (தாய் சுவருக்கு மணலைக் குறைத்து தடுப்பு சுவர்களுக்குக் கூட்டிக் கொள்ளணும். அப்போதுதான் வலு.) | ஒரு பங்கு சிமெண்டுக்கு மூணு முதல் ஆறு பங்கு வரை மணல் |
| பூச்சு வேலை (வெளிப்பூச்சு கொஞ்சம் சொற சொறப்பாத்தான் இருக்கணும்.) சுவரை விட சீலிங் பூச்சுக் கலவையில் சிமெண்ட் கூடுதலாய் இருக்கணும். | ஒரு பங்கு சிமெண்டுக்கு மூணு முதல் ஆறு பங்கு வரை மணல். |

(பி.கு. : கனகவல்லி அதிகமாய் அலைந்து வெயிலில் நிற்பதுபோல் தெரிகிறது. உதவி வேணுமானால் லெட்டர் போடுங்கள். வந்து சேர்கிறேன். தயங்க வேண்டாம்.)

''அப்பாவும் பெண்ணும் பட்டியல் போட்டுப் போட்டே ஆளைக் கொன்னுடுவீங்களே!'' நொடித்தவாறே எழுந்தார் திருமலைசாமி. மாமனாரின் கடிதத்தைப் பத்திரமாக மடித்து பர்ஸில் வைத்துக் கொண்டார்.

**சு**வர்கள் எழ ஆரம்பித்து விட்டன. ஒவ்வொரு ஜதை செங்கற்களுக்கும் இடையே இம்மி இடைவெளியில்லாமல் கலவை பதிகிறதா என்று கண்ணில் விளக்கெண்ணெய் ஊற்றிக் கொண்டு பார்த்தாள் கனகவல்லி. ஜன்னல்களுக்கு இடம் விட்டதைப் பார்த்தபோது, ஹால் ஜன்னல், வாசல் கதவுக்கு மிக அருகே இருப்பது தெரிந்தது.

''இந்த ஜன்னலை மட்டும் கொஞ்சம் நகர்த்திடலாமே...''

''அம்மா, ஒன்னு நீங்க சொல்றபடி செய்யணும், இல்ல ஆர்கிடெக்ட் விருப்பத்துக்குச் செய்யணும். என்னை என்ன பண்ணச் சொல்றீங்க...'' படபடத்தார் காமேகவரன்.

''அவரையும் கேட்டுக்கிட்டே செய்வோம்.'' காமேகவரனை ஆசுவாசப்படுத்தி விட்டு ஆனந்தமூர்த்தியை வரவழைத்தாள் கனகவல்லி.

''மாத்திக்கலாங்க - ஒன்னும் பிரச்னை வராது. ஆனா இதுவே பைல் ஃபவுன்டேஷன் போட்டிருந்தா நம்ம இஷ்டத்துக்கு ஜன்னல் பொஸிஷனையெல்லாம் மாத்த முடியாதும்மா. தெரிஞ்சுக்குங்க....'' என்றார் ஆனந்தமூர்த்தி.

**க**னகவல்லி, மகன் குமாரின் காதைப் பிடித்துத் திருகிக் கொண்டிருந்தாள். சீர்வரிசை மைசூர்பாகு சைஸில் சில, காங்கிரீட் வில்லைகளை வைத்து அவன் விளையாடிக் கொண்டிருந்ததுதான் அவள் கோபத்துக்குக் காரணம்.

''யாரைக் கேட்டுடா இதை இங்க எடுத்துட்டு வந்தே?''

''விடு, விடு கனகு! அவன் ஆசைப் பட்டானேன்னு நான்தான் காமேகவரன் கிட்டே கேட்டு நாலு Cover block வாங்கித் தந்தேன்.''

''கவர் பிளாக்கா?''

''ஆமாம். வீட்டுக் கூரைக்கு காங்கிரீட் போட சென்டரிங் அடிச்சு, கம்பி கட்டி வைச்சிருக்காங்க இல்ல.... அந்த கம்பிகள்ளாம் சென்டரிங் பலகையைத் தொடாம தூக்கி நிறுத்தறத்துக்கு, அடியில் இந்த கவர் பிளாக்குளை அண்டை குடுப்பாங்க. இதை முன்னாடியே தயார் செய்து curing பண்ணி வைச்சுக்கணும்.''

''வர்ற வியாழக்கிழமைதானே ஜல்லி போடப் போறாங்க?''

- காது தப்பியது என்று குமார் ஓடிவிட கனகவல்லியும் திருமலைசாமியும் டென்ஷனுடன் உரையாடலைத் தொடர்ந்தனர்.

''ஆமாமாம். நானும் அன் லிக்கு லீவு போட்டிருக்கேன். 'தேனடை' வி ழ ா ம






பார்த்துக்கணும்; கலவையைக் கவனமாப் போடணும்; நிறுத்தாம வேலை செய்து முடிக்கணும்....."

"வியாழக்கிழமை காலைல கோவிலுக்குப் போய் அர்ச்சனையை முடிச்சுட்டுக் கிளம்பறோம்."

"சரி.."

வெற்றிகரமாகக் கூரைக்குக் கான்க்ரீட் போட்டாயிற்று. அதற்கு நினைமும் தண்ணீர் ஊற்றி நனைக்க அமர்த்திய சித்தாள் ஏணி ஏறும் போது தவறி விழுந்து சிறு விபத்து நிகழ, மருத்துவ செலவை கே.ஏ. காமேகவரன் ஏற்பதா கனகவல்லி - திருமலைசாமி ஏற்பதா என்ற பிரச்னை வெடித்தது.

வாக்குவாதம் முற்றி, உச்சம் அடைந்து, வேலை ஏறத்தாழ ஒரு மாதம் நின்றே போனது.

திருமலைசாமி, கே.ஏ. காமேகவரனை, 'கழுத்து அறுப்பு' காமேகவரன் என்று 'பட்டப்பெயர்' கொடுத்து, மனத்துக்குள் வைய ஆரம்பித்தார். 'விபத்துகளுக்கு யார் பொறுப்பு என்கிறதையும் நீங்க ஒப்பந்தத்துல குறிப்பிட்டிருக்கணும்' என்றார் அலுவலக நண்பர்.

மனசு கேட்காமல் கனகவல்லி சமரச முயற்சிகளில் இறங்கினாள். இதற்குள், விபத்துக்கு ஆளான சித்தாள் உடல் குணமாகி வேறு கட்டட வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டாள்!

பூச்சு வேலை முடிந்து விட்டது. கான்ட்ராக்டர் கொடுத்த எஸ்டிமேட்படிதான் அதுவரை செலவானது என்றாலும் வீட்டின் front elevation இல் சிற்சில மாற்றங்கள் செய்து பொலிவு கூட்ட எண்ணியதில் கையைப் பயங்கரமாகக் கடித்தது. எனவே, தரைக்கு மலிவான கிரே கலர் மொஸைக்; பாத்ரூம்களுக்கு ஆடம்பரமில்லாத ஃபிட்டிங்ஸ் (கலர் கனவுகள் கைவிடப்பட்டன) குறைந்த பட்சமாக எலக்ட்ரிகல் ஃபிட்டிங்ஸ் என்று சிக்கனமோ சிக்கனமாய் வீட்டை முடித்தார்கள்.

மொட்டை மாடியில் வெதரிங் கோர்ஸ் போட்டு மூன்று நாட்கள் கடுக்காய் வெல்லம் கலந்த நீரும், பின்னர் நாலு நாட்கள் சுண்ணாம்புத் தண்ணீரும் தெளித்தார்கள்.

"எண்ணெய் தடவி நாட்டு ஓடு பரப்புவதையெல்லாம் ஒரு மாசம் கழிச்சுத்தான் செய்யணும் - நீங்க கிரஹப்பிரவேசத்தை முடிச்சுக்குங்க" என்றார் கே.ஏ. காமேகவரன்.

கனகவல்லி எல்லா குழாய்களையும் திறந்து ஓவர்ஹெட் டாங்கிலிருந்து ஒழுங்காய்த் தண்ணீர் வருகிறதா என்று பார்த்துக் கொண்டாள். அதே போல் கழிவு நீர் ஒழுங்காக ஓடிச் சாலையில் பாதாளச் சாக்கடையில் சேர்கிறதா என்றும் சோதனை போட்டாள்.

"தாங்க்யூ காமேகவரன் சார்! ஃபார் எவ்ரிதிங்" என்றார் திருமலைசாமி.

திருமலைசாமியின் அகராதியில் 'கே. ஏ.' காமேகவரன் இனி 'கழுத்தறுப்பு' காமேகவரன் இல்லை; 'கடமை ஆற்றிய' காமேகவரன் என்று புதிய நாமகரணம் ஆகியிருக்கிறது அவருக்கு!

கதைவடிவம் : மலர்.



# ஃப்ளாட்டை வாங்கிப்பார்!

இன்றைக்கு இருக்கிற நிலைமையில், நடுத்தர மக்களுக்குத் தனி வீடு கட்டுவது என்பது எண்ணிக்கூட பார்க்க முடியாத விஷயமாகப் போய்விட்டது. அதனால்தான் பிளாட்டுக்கள் எனப்படும் காலிமனைகள் எல்லாம், ஃப்ளாட்டுகள் எனப்படும் அடுக்குமாடிக் குடியிருப்புகளாக மாறிக் கொண்டிருக்கின்றன.

இந்த ஃப்ளாட்டைக் கூட கையில் இருக்கிற சேமிப்பு தவிர, வெளியே கடனையும் வாங்கித்தான் வாங்க வேண்டியுள்ளது. அதிலும், வாழ் நாளில் ஒரே ஒரு தடவை செய்கிற முதலீடு. அதனால்...ஃப்ளாட் வாங்குகிறவர்கள் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம்.

ஜாக்கிரதை என்றால்?

அலாக்ரிடி கட்டட நிறுவனத்தின் அதிகாரி டாக்டர் இந்துகாந்த் ரகடே சொல்கிறார்:

ஃப்ளாட் வாங்குகிற போது, கட்டித் தரப் போகும் நிறுவனத்திடம் நீங்கள் ஏழு கேள்விகள் கட்டாயம் கேட்க வேண்டும்.

ஒன்று : ஃப்ளாட்டுகளை எந்த மனையில் கட்டப் போகிறீர்கள்? அந்த மனையின் முக்கியமான உரிமைப்பத்திரங்களை நான் பார்க்கலாமா?

● மனையின் உரிமைப் பத்திரங்களைப் பரிசீலிப்பது மிகவும் அவசியம். இப்பத்திரங்களின் சான்று பெற்ற நகல்களைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள். உங்கள் வக்கீலிடம் காட்டுங்கள். நிலத்தின் சொந்தக்காரருடைய உரிமையை, சந்தேகத்துக்கு இடமில்லாமல் நிரூபிக்கின்றதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

● காண்டிராக்டர் வேறொருவருடைய நிலத்தில் ஃப்ளாட்டுகளைக் கட்டித்தரும் பட்சத்தில், அவர்கள் இருவருக்கும் இடையேயான, ஸ்டாம்ப் பேப்பரில் கையெழுத்திட்ட ஒப்பந்தப் பத்திரத்தைப் பார்ப்பது மிக அவசியம்.

● நிலத்தைப் பொறுத்தவரை, பரிசீலிக்க வேண்டிய பத்திரங்கள் உண்டு. இதற்கு முன்பாக அந்த நிலத்தை வாங்கியதற்கான அத்தாட்சி; வாங்கியவர் காலமாகி இருந்தால் அவருடைய வாரிசுதாரராகிய-தற்சமயச் சொந்தக்காரருக்குத்தான் அந்த நிலம் சொந்தம் என நிரூபிக்கும் உயில் அல்லது நீதிமன்ற உத்தரவு; சார்பதிவாளர் அலுவலகத்திலிருந்து பெற்ற, 30 ஆண்டுகளுக்கு உரிய வில்லங்கப் பத்திரம். பட்டா; மனை, நில உச்சவரம்புக்கு உட்பட்டதுதான் என்பதற்கான சான்று

● நீங்கள் வாங்கப் போவது, நிலத்தின் ஒரு குறிப்பிட்ட பாகம் அல்ல. அந் நிலத்தின் வகுக்கப்படாத ஒரு பாகத்தின் மீது உரிமை. அதாவது அன்-டிவைடட் ஷேர். இது உங்களுடைய ஃப்ளாட்டின் முழுப்பரப்பைச் சார்ந்தது. இதற்கான விற்பனைப் பத்திரத்தை, ஃப்ளாட் கட்ட ஆரம்பிக்கு முன்பே, சார்பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்வது அவசியம்.

இரண்டு: உத்தேசக் கட்டடப் பரப்பு, எம்.எம்.டி.ஏ.வால் நிர்ணயிக்கப்பட்ட தரைப் பரப்புக் குறியீட்டு எண்படி அதாவது, ஃப்ளோர் ஸ்பேஸ் இன் டெக்ஸ்-படி இருக்கிறதா?

இந்த இடத்தில் அனைவரும் இன்னொரு விஷயத்தையும் தெரிந்து கொள்வது அவசியம். கட்டடங்களில் 'ஸ்பெஷல் பில்டிங்ஸ்' என்கிற ஒரு பிரிவும் உண்டு என்பதுதான் அது.

விசேஷக் கட்டடங்கள் என்றால் என்ன?

1. இரண்டுக்கு அதிகமான மாடிகள் உள்ள கட்டடங்கள்.
2. நான்கு குடியிருப்புகளுக்கு மேல் உள்ள கட்டடங்கள்.
3. முந்நூறு சதுர மீட்டர் தரைப்பரப்புக்கு அதிகமாக உள்ள வர்த்தகக் கட்டடங்கள்.

● எந்தக் கட்டடமாக இருந்தாலும் Planning permit (p.p) யும்



* இந்துகாந்த் ரகடே

Buildings Permit (B.P.) ம் பெற்றுத்தான் ஆகவேண்டும். P.P என்பது எம்.எம்.டி.ஏ. அளிக்கும் அனுமதி. B.P. என்பது கார்ப்பரேஷன் அல்லது முனிசிபாலிடி வழங்குவது.

● விசேஷக் கட்டடங்கள் மற்றும் பலமாடிக் கட்டடங்கள் தவிர, மற்ற சாதாரணக் கட்டடங்களுக்கான P.P. கொடுக்கும் அதிகாரத்தைக் கார்ப்பரேஷனுக்கும் முனிசிபாலிடிக்கும் வழங்கியுள்ளது, எம்.எம்.டி.ஏ. ஆக, சாதாரணக் கட்டடங்களுக்கான P.P மற்றும் B.P. ஆகிய இரண்டையும் கார்ப்பரேஷனோ அல்லது முனிசிபாலிடியோதான் வழங்குகிறது. இந்த இரண்டு அனுமதியும் இருக்கிறதா என்பதைப் பார்ப்பது மிகமிக அவசியம்.

● ஃப்ளாட்டின் பரப்பளவுக்கான விவரங்களைக் கேட்க வேண்டும். பரப்பளவு என்பது Bureau of Indian Standards (IS code 3861) -ல் சொல்லிய விளக்கத்தின்படி இருத்தல் வேண்டும் என்பதை ஒப்பந்தத்திலேயே சேர்த்துக் கொள்வது அவசியம்.

● இது தவிர, ஃப்ளாட்டாக இருந்தாலும் சரி, வீடாக இருந்தாலும் சரி, எது எது எந்தெந்த அளவுகளில் இருக்க வேண்டும் என்பதற்கு பொதுவானதொரு வழிமுறையாக National Buildings code என்ற ஒன்றும் இருக்கிறது. அதன்படி...

*1.* அறைகளின் உயரம் (Finished floor level up to bottom of ceiling) ஒன்பதடி இருக்க வேண்டும்.

*2.* ஒரே படுக்கையறையுடையதாக இருந்தால் அதன் பரப்பளவு குறைந்தது 9.5 சதுர மீட்டர் (102 ச.அடி) இருக்க வேண்டும். இரண்டு படுக்கையறைகள் என்றால் 80 ச.அடி இருக்கலாம். ஆனால் குறைந்த அகலம் எட்டடியாக இருக்க வேண்டும்.

*3.* கிச்சன் 4.5 சதுர மீட்டர்(48 ச.அடி). கிச்சன், ஸ்டோர் ரூமோடு இணைந்தது என்றால் 5.5 ச.மீ.(60 ச.அடி)

*4.* டாய்லெட் 12 சதுர அடி. பாத்ரூம் டாய்லெட் இணைந்தது என்றால் முப்பது ச.அடி.பாத்ரூம் தனி என்றால் 20 ச.அடி.

● Undivided Share of Land சரியானபடி பிரித்துக் கொடுக்கப்படுகிறதா என்பதைக் கவனமாகக் கணிக்க வேண்டும். 4,000 ச.அடி நிலத்தில் பத்து ஃப்ளாட்கள் கட்டினால் ஒவ்வொரு ஃப்ளாட் சொந்தக்காரருக்கும் 400 ச.அடி தர வேண்டும். இதற்குக் குறைவாகக் கொடுத்தால் அதிகமுள்ள பரப்புக்கு உங்கள் Promoter உரிமை கொண்டாட முடியும்!

● ஃப்ளாட்டின் மொத்தப் பரப்பளவில், Undivided share என்றும் பொதுவான பரப்பான மாடிப்படியையும் அதைத் தொட்ட இடத்தையும் சேர்க்கலாமே தவிர, வாட்டர் டாங்க், சன்ஷேடு போன்றவற்றைச் சேர்க்கக் கூடாது.

● இரண்டு ஃப்ளாட்டுகளுக்கு இடையேயான சுவரின் கனம் இத்தனைதான் இருக்க வேண்டும் என்ற விதி ஏதும் இல்லை. ஆனால் ஒன்பது அங்குல கனம் இருத்தல் நல்லது. வெளிச்சுவர்களின் கனம் 9 அங்குலம் நிச்சயம் இருக்க வேண்டும்.

● விசேஷ கட்டடங்களுக்கு முன்புறம் உள்ள சாலையின் அகலம் பத்து மீட்டர் அதாவது 33 அடி அகலம் இருக்க வேண்டும்.

● காரின் ஒருவழிப் போக்குவரத்துக்கு 3.5.மீட்டரும் இருவழிப் போக்குவரத்துக்கு 7.2 மீட்டரும் இடம் விட வேண்டும்.

● விசேஷக் கட்டடத்தின் முன்னாலும் பக்க வாட்டிலும் 3.5. மீட்டர் இடைவெளி அவசியம் விட வேண்டும்.

● நூறு சதுர மீட்டர் பரப்பளவே கொண்ட ஃபிளாட்டுகள் கொண்ட குடியிருப்பாயின், கார் பார்க்கிங்குக்கு இடம் விட வேண்டும் என்கிற கட்டாயமில்லை.



● விசேஷக் கட்டடங்களாக இருந்தால் கட்டடம் முடிந்தவுடன் எம்.எம்.டி.ஏ.விலிருந்து Completion Certificate வாங்க வேண்டும்.

● ஒரு காலிமனையின் பரப்பு 6000 சதுர அடி இருக்கிறது என்றால், அதன்மேல் ஒன்றரை மடங்கு, அதாவது 9000 சதுர அடி பரப்புள்ள கட்டடத்தைத்தான் கட்டலாம். (இதைப் பற்றிய சட்டங்கள் அடங்கிய புத்தகத்தை எம்.எம்.டி.ஏ. அலுவலகத்திலிருந்து வாங்கியோ, அல்லது அங்குள்ள விசாரணைப் பகுதியிலிருந்து அறிந்து கொள்ளுவதோ நல்லது.)

மூன்று: என்னுடைய ஃபிளாட்டுக்கான ஒதுக்கீட்டுக் கடிதம் ஒன்று தருவீர்களா?

● இத்தகைய ஒதுக்கீட்டுக் கடிதத்தைக் கேட்டுப் பெறுவது அவசியம். இந்த ஒதுக்கீட்டுக் கடி

தத்தில், உங்கள் ஃப்ளாட்டு, உருவாகும் கட்டடத்தில் எங்கே இருக்கறது, அதன் முழுப் பரப்பு, அதன் பொருட்டு வாங்கப்படும் வகுக்கப்படாத நில பாகத்தின் உரிமை எவ்வளவு, அதன் மதிப்பு எவ்வளவு, பத்திரம் பதிய ஆகும் செலவுகள், ஸ்டாம்ப் கட்டணம் எவ்வளவு, கட்டுமானச் செலவு எத்தனை, விற்பனை மற்றும் வேறு வரிகளின் தொகை விவரங்கள் இடம் பெறவேண்டும். எத்தனை மாதத்துக்குள் உங்கள் ஃப்ளாட்டைக் கட்டி உங்களிடம் ஒப்படைப்பார்கள், பணத்தைச் செலுத்தும் தவணைகள் எத்தனை, என்பன கட்டாயம் இக்கடிதத்தில் குறிப்பிடப்பட வேண்டும். ஃப்ளாட்டின் வரைபடத்தையும், மொத்தக் கட்டடத்தின் வரை படத்தையும், இத்துடன் கேட்டு வாங்கிக் கொள்ளுங்கள்.




● குறிப்பிட்ட தேதிக்குள் ஃப்ளாட்டை ஒப்படைக்கவில்லை என்றால் தாமதமான காலத்துக்கு உண்டான நஷ்டஈடும் வாங்க முடியும். (அலாக்ரிடியில் அவர்களாகவே நஷ்டஈடு கொடுக்கிறார்கள்.)

நான்கு: விவரமான, கட்டுமான ஒப்பந்தம் ஒன்றைத் தருவீர்களா?

● ஃப்ளாட் கட்டி முடித்த பின் அதன் மேலிருக்கும் உங்கள் உரிமையை, இந்தக் கட்டுமான ஒப்பந்தம்தான் அளிக்கிறது. இதில், ஒதுக்கீட்டுக் கடிதத்தில் குறிப்பிட்ட செலவுகள் எல்லாம் இடம் பெற வேண்டும்; எப்போது ஃப்ளாட் நம் கைக்குக் கிடைக்கும் என்ற விவரமும் இருக்க வேண்டும். பண உதவி பெறும் தருணங்களில் கூட கட்டுமான ஒப்பந்தம் உங்களுக்குக் கை கொடுக்கும்.

ஐந்து: கட்டுமானம் ஆரம்பிக்கும் முன் எம்.எம்.டி.ஏ.வின் அனுமதி பெற்ற வரைபடத்தின் நகலைத் தருவீர்களா?

● நீங்கள் முதலில் ஃப்ளாட்டை புக் செய்யும் போது கிடைத்த வரை படமும், எம்.எம்.டி.ஏ. அங்கீகரித்த வரைபடமும் ஒன்றோடு ஒன்று முழுமையாய் ஒத்திருக்கிறதா என்று பாருங்கள். இல்லை என்றால் எம்.எம்.டி.ஏ. கடப்பாறையும் கையுமாய் வந்து, உங்கள் செலவில் உருவாக்கிய ஃப்ளாட்டை எந்த நேரத்திலும் இடிக்கலாம்.!

ஆறு: நான் என் புது ஃப்ளாட்டுக்குக் குடி புகுந்த பிறகு, என் ஃப்ளாட்டைப் பொறுத்தவரை, உங்கள் பொறுப்புகளும், வாக்குறுதிகளும் என்னென்ன?

● ஃப்ளாட்டு சொந்தக்காரர்களின் சங்கத்துக்கு, கட்டடத்தின் அஸ்திவாரம், நீர் வசதி, கழிவுநீர் வசதி, மின்சார வசதி முதலியவற்றின் வரை படங்களைக் கொடுக்க வேண்டும். வரைபடங்கள் இல்லாவிட்டால், உங்கள் ஃப்ளாட்டில் எந்த இணைப்பு எங்கே அமைக்கப்பட்டிருக்கிறது என்று தெரியாமல் அவஸ்தைப்படுவீர்கள்!

● குடி புகுந்த பிறகு, ஃப்ளாட்டில் வெளிப்படும் குறைபாடுகளைச் சீர் செய்வார்கள் என்ற வாக்குறுதியையும் பெற்றுக் கொள்ளுங்கள்- எழுத்து மூலமாக.

ஏழு: மேற்கண்ட ஆறு கேள்விகளுக்கும் திருப்தியான பதில்களை நீங்கள் கொடுத்து, அதை ஏற்றுக் கொண்ட முன்மாதிரி ஏதாவதும் காண்பிக்க முடியுமா?

● ஏற்கெனவே அவர்கள் கட்டி முடித்து, ஒப்படைத்த இடங்களில் ஏதும் குளறுபடி இல்லை என்று உறுதி செய்து கொள்ளலாம்.

● கட்டுமானத்தில் ஏதாவது பிரச்னை இருக்கிறது என்று நீங்கள் குடிவந்த பிறகு கருதினால், உங்களிடம் ஃப்ளாட் ஒப்படைக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குள் கன்ஸ்யூமர் கோர்ட்டுக்குப் போய் நியாயம் கேட்கலாம்.

அலாக்ரிடி நிறுவனத்தைப் பொறுத்தவரை, அவர்கள் எந்த ஓர் அரசாங்க அமைப்புக்கும் கையூட்டுக் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுவதில்லை என்பதுதான் அவர்கள் சிறப்பு. இதுவரை ஆயிரத்துக்கு மேல் ஃப்ளாட்டுகளைக் கட்டி உரிமையாளர்களிடம் ஒப்படைத்த பெருமை இவர்களுக்கு உண்டு.

அசோஸியேடட் பில்டர்ஸ் நிறுவனத்தின் உரிமையாளர் சிவராமன் சொன்னதும் கவனத்துக்குரியது : இப்போது வருகிற மொசைக் முன்பு வந்ததுபோல் தரமானதாக இல்லை. எனவே செராமிக் டைல்ஸ் போடுவதை நாங்கள் சிபாரிசு செய்கிறோம். மேலும், ஃப்ளாட்டுகள் உங்களிடம் ஒப்படைக்கப்படும் போது, அதனுடன் சம்பந்தப்பட்ட Parent document களையும் பில்டர்களிடமிருந்து வாங்குவதற்குத் தவறிவிடக் கூடாது.

தொகுப்பு : சாருகேசி

புகைப்படங்கள் : கோபிநாத், பாலாஜி

## அசோக் லேலண்ட்:

# பஸ்_லாரி துறையிலிருந்து பலமாடிக் கட்டடங்கள் வரை...

தனியார் வீட்டு வசதித் துறையில், பெரும்பாலும் ஒரே ஒரு புரொப்ரைடர் அல்லது முதலாளி உள்ள நிறுவனங்களும், பார்ட்னர்ஷிப் நிறுவனங்களும் மட்டுமே இயங்கி வருகின்றன.

கட்டுமானம் திருப்திகரமாக இருக்குமா, பணத்தைக் கொடுத்தால் பத்திரமாக இருக்குமா, குறித்த காலத்தில் கட்டித் தருவார்களா, அரசின் விதி முறைகளைக் கடைப்பிடித்து, பிற்காலத்தில் சங்கடங்கள் எதையும் சந்திக்காத வண்ணம் குடியிருப்பு களை உருவாக்கி ஒப்படைப்பார்களா என்ற கவலை, முதலீடு செய்யும் எவருக்கும் இருக்கத்தான் செய்யும்.

போக்குவரத்துத் துறையிலும், நிதி நிர்வாகத் துறையிலும் ஓர் உன்னதமான இடத்தைப் பிடித்த நிறுவனம் ஒன்று வீட்டு வசதித் துறையில் காலடி எடுத்து வைக்கவும் திறமையான நிர்வாகத்திலும், நம்பகத்தன்மையிலும் ஆர்வம் உள்ள மக்கள் இதை ஆவலோடு வரவேற்றார்கள்.

ஒரு வருடத்துக்கு முன் உருவான அசோக் லேலண்ட் ப்ராப்பர்ட்டீஸ் லிமிடெட், ரியல் எஸ்டேட் துறையில் பிரவேசித்தது இந்தப் பின்னணியில்தான்.

''நிர்வாகத் துறையில் எங்களுக்கு இருந்த நல்ல பெயர், நாங்கள் வெகு விரைவில் இந்தத் துறையில் காலூன்ற உதவியது. நல்ல கட்டட அமைப்புள்ள குடியிருப்புகளை அழகாக உருவாக்கித் தருகிறோம் என்ற நம்பிக்கையே, பலரை எங்களிடம் வரச் செய்தது!'' என்கிறார் அசோக் லேலண்ட் ப்ராப்பர்ட்டீஸ் லிமிடெட்டின் நிர்வாக அதிகாரி வி. வி. சர்மா.

பம்பாயிலும், பெங்களூரிலும் மிகப் பெரிய திட்டங்களைத் திறமையுடன் நிறை வேற்றிய சாமர்த்தியசாலி என்ற பெயர் சர்மாவுக்கு உண்டு.

''தரமான சிமெண்ட்டை உபயோகித்து, கட்டுமான இஞ்சினீயர்களின் உரிய ஆலோசனைகளோடு குடியிருப்புகள் கட்டப்படும்பொழுது பிரச்னைகள் எதுவும் எழ வாய்ப்பில்லை. சுவருக்கு உள்ளே மறைந்த (கன்ஸீல்ட்) வயரிங், பிளம்பிங் இவற்றில் எல்லாம் வெகு கவனமாக இருக்கிறோம். காப்பர் கம்பி உபயோகிப்பதிலும், சரியாக 'எர்த்திங்' கொடுப்ப திலும் கவனமாக இருந் தால் பின்னாளில் தொல் லைகள் எதையும் சந்திக்க வேண்டாம். உதாரணத் துக்கு ஒன்று சொல்லு கிறேன்: 15 ஆம்ப் எலக்ட் ரிகல் பிளக்கை, எப்போ தும் மெயினிலிருந்து தனி யாக வயரிங் செய்து கொடுப்பதுதான் நல்லது. பலரும் இதைச் சாதாரண மாகக் கவனிப்பதில்லை.



அதுமட்டுமல்ல, காப்பர் கம்பிக்குப் பதில் அலுமினியக் கம்பியில் வயரிங் செய்துவிடுவார்கள்!''

இன்னொரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிட்டார் சர்மா. காலதாமதம் செய்வதால் பொருட்களின் விலை ஏற்றமும், ஊழியர்களின் கூலியும் ஏறிக் கொண்டேபோகும். அதனால் குறிப்பிட்ட காலத்தில் குடியிருப்பைக் கட்டிக் கொடுத்து ஒப்படைப்பதில் வெகு தீவிரமாக இருக்கிறோம்.''



✱ அசோக் லேலண்ட் ஃப்ளாட்டுகள்...

அசோக் லேலண்ட் ப்ராப்பர்ட்டீஸில் ஃப்ளாட் பதிவு செய்யும் அயல்நாட்டில் வசிக்கும் இந்தியர்களுக்கு (NRI), பல தொல்லைகளிலிருந்து விடுதலை. நம்பகமான நிறுவனமாய் இருப்பதால், எப்படிக் கட்டியிருப்பார்களோ, என்னவோ என்ற கவலையே இல்லை. விதிகள் எதையும் மீறுவதில்லை. யாரும் வந்து பார்க்க வேண்டும், கவனிப்புத் தேவை என்ற பிரச்னைக்கே இடம் வைக்காமல், இவர்களது சூபர்வைசர்கள் பணியாற்றுகிறார்கள்.

✱ சர்மா



அதேபோல நிலம் சம்பந்தப்பட்ட ஆவணங்களைப் பரிசீலிப்பதிலும், தேர்ந்த சட்டத்துறை வல்லுநர்களின் ஆலோசனை இவர்களுக்குக் கிடைக்கிறது.

''பிளம்பிங்குக்குப் பயன்படுத்தும் குழாய்களைக் கூட தகுதியான நிறுவனத்திடம் சர்ட்டிபிகேட் பெற்ற பிறகே உபயோகிக்கிறோம்!'' என்கிறார் சர்மா.

''ஆரம்பத்திலேயே - பிளானைத் தயாரிக்கும்போதே - நீண்ட கலந்துரையாடலில் ஈடுபடுகிறோம். ஒரு பிளான், கடைசியாகத் தயாராகும்வரை மாற்றி மாற்றி வரைகிறோம். துளி இடம்கூட வீணாகப் போவதில்லை என்பதையும், படுக்கை அறைகளின் 'பிரைவசி' பாதிக்கப்படுவதில்லை என்பதையும் உறுதி செய்து கொள்ளுகிறோம். கூடுதலான சுவர்ப் பகுதிகளைக் குறைக்கிறோம். அமெரிக்காவில் சொல்லுவார்களாம். திட்டமிடுதலில் 60 சதவிகித நேரத்தைச் செலவிட்டால், பிறகு செயல் வடிவில் எந்த விதப் பிரச்னையும் எழாது என்று. அதை மனத்தில் கொண்டு, பிளான் தயாரானதுமே, சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் முன்கூட்டியே விவாதித்து, இதில் ஏதும் குறைகள் இல்லை, மாற்றங்கள் செய்யத் தேவை இல்லை என்று உறுதி செய்து கொள்ளுகிறோம். இதனால், பிறகு உருவாகக் கூடிய பிரச்னைகள் அத்தனையையும் தவிர்த்து விடுகிறோம்.''

திடமான, அழகான டிசைன்கள் கொண்ட கதவுகள்; கீழே இடத்தை அடைக்காமல், மேலே லாஃப்ட்டுகள், வசதியான சமையலறை மேடை என்று அழகுணர்ச்சியுடன் வடிவமைக்கிறார்கள்.

குழந்தைகள் விளையாட இடம், லேண்ட்-ஸ்கேப்பிங் என்று முன்புறமும் பக்கவாட்டிலும் அழகான செடி கொடிகள். அலுத்துக் களைத்து அலுவலகத்திலிருந்து வந்தாலும், விடுமுறை நாட்களிலும் நிம்மதியுடனும் உற்சாகத்துடனும் வாழ்வதற்குத் தேவையான எல்லா வசதிகளுடனும் ஃப்ளாட்டுகள் அமைக்கப்படுகின்றன.

''வெற்று இடங்கள் என்று தனியாக ஒதுக்குவதில்லை. அப்படி ஒதுக்கினால், குப்பை கூளங்களைக் குவித்து வைக்கும் நமது மனோபாவத்தில், எல்லாவற்றையும் அந்த இடத்தில் தள்ளிவிடுகிறோம். இது கூடாது என்பது எங்கள் அபி·

✱ உறுதியான கதவுகள்...





✦ அழகான சமையலறை....

பிராயம்!'' என்றார் சர்மா. ''வெளிச்சமும் காற்றோட்டமும் எல்லா ஃப்ளாட்டுகளிலும் இருக்கிற மாதிரி அமைக்கிறோம். இரண்டு பக்கமும் காற்று வருகிற மாதிரி அமைக்கிறோம். பகலிலேயே விளக்கைப் போட்டு வைக்க வேண்டிய அவசியம் சில ஃப்ளாட்டுகளில் பார்த்திருப்பீர்கள். எங்கள் ஃப்ளாட்டுகளில் அந்த அவசியம் இல்லை!

''புதிய, நவீன ஐடியாக்கள் கொடுக்கவும், அனுபவரீதியான ஆலோசனைகள் சொல்லவும், எங்களிடம் ஊழியர்கள் இருக்கிறார்கள். எதை எதை முன்னால் ஆர்டர் செய்ய வேண்டும், எதை அவ்வப்போது ஆர்டர் செய்ய வேண்டும் என்பதில் வெகு கவனமாக இருப்போம். இதனால் வேலை தடைப்படாது என்பதோடு, அனாவசியமாக முதலீடும் முடங்கிப் போகாது!

''அதிகபட்சமான இரும்பு உபயோகத்தைக் குறைக்கும் விதத்தில், பளு தாங்கக் கூடிய கான்கிரீட் ப்ளாக்குகளைப் பயன்படுத்துகிறோம். அதாவது லோட் பேரிங் கான்கிரீட் ப்ளாக். இவை இயந்திரங்களில் வடிவமைக்கப்படுவதால் அழுத்தமானவை. இதுபோல நவீன தொழில்நுட்ப ஆலோசனைகள், கட்டுமானப் பணியில் அதிகச் செலவைக் குறைப்பதோடு, நீண்ட கால உழைப்புக்கும் பயன்படுகின்றன!'' என்கிறார் சர்மா.

சர்மா தெரிவித்த சில கருத்துக்களும் யோசனைக்கு உரியவை.

● உலகம் முழுக்க, பத்திரப்பதிவுக்கு 2 சதவிகிதமே வசூலிக்கப்படும்பொழுது, இங்கே மட்டும் 14 சதவிகிதம் என்பது சற்று அதிகம்தான்.

● பத்து லட்ச ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள ஒரு நிலத்தை (அல்லது சொத்தை) வாங்க, இன்கம்டாக்ஸ் அதிகாரிகளின் அனுமதி பெற மூன்று மாதங்களுக்கு மேல் ஆகிறது.

● பெருநகர வளர்ச்சி மன்றத்திடமிருந்து அனுமதி பெறக் கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் ஆகிறது. எல்லா வகைகளிலும் முழுமையான பிளான்களைச் சமர்ப்பித்தாலும், மாதக் கணக்கில் அவை தேங்கிக் கிடக்கும் நிலைமை மாறுவது நல்லது.

● அரசு, ஒரு குறிப்பிட்ட காலக்கெடு நிர்ணயித்து, அதற்குள் அனுமதி வழங்குவது நல்லதல்லவா?

● அர்பன் லேண்ட் சீலிங் சட்டப்படி எடுத்துக் கொள்ளப்பட்ட பல நிலங்கள், அவற்றுக்கான உரிய தொகை கொடுக்கப்படாமல், வழக்குகளில் முடங்கிக் கிடக்கின்றன. எதற்காகச் சட்டம் கொண்டுவரப் பட்டதோ, அதன் நோக்கமே தோற்றுப் போய் விடாதா?

அசோக் லேலண்ட் பிராப்பர்ட்டீஸ் கட்டித் தரும் ஃப்ளாட்டுகளில், ஒரு திட்டம் ஏற்கெனவே முடிக்கப்பட்டு ஃப்ளாட்டுகள் ஒப்படைக்கப்பட்டுவிட்டன. இரண்டு திட்டங்களில் வேலை நடைபெறுகிறது. ஏழு புதிய திட்டங்கள் ஆரம்பிக்கப்படும் நிலையில் இருக்கின்றன.

- எஸ். வி. என்.

சம்பளம் வாங்கும் சராசரி மனிதர், கொஞ்சமே சேமிப்பை வைத்துக் கொண்டு, ஃப்ளாட்டை நினைத்து ஏங்காமல் இருக்கச் சில நிதி நிறுவனங்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானது ஹவுசிங் டெவலப்மெண்ட் ஃபைனான்ஸ் கார்ப்பரேஷன். சுருக்கமாக HDFC என்று அழைக்கப்படுவது.

இந்த நிதியமைப்பின் சென்னைக் கிளை மேலாளர் நரசிம்மன் சில விவரங்களைத் தந்தார்:




● மாதச் சம்பளம் வாங்குவோருக்கும் வீடு கட்டக் கடன் தருகிறோம்; சொந்தமாகத் தொழில் செய்கிறவர்களுக்கும் கடன் தருகிறோம்.

● கடன் தொகையை நிர்ணயிக்கும் போது, கடன் பெறுபவரின் 'திருப்பித் தரும் சக்தி'யைக் கணக்கிடுகிறோம். அதன் அடிப்படையில், எவ்வளவு கொடுக்க வேண்டும் என்று முடிவு எடுக்கிறோம்.

# கடனுதவிக்கு எங்கே போவது?



● நரசிம்மன்

● அதிகபட்சமாக, பத்து லட்ச ரூபாய் வரை கடன் கொடுக்கிறோம். ஆனால் கட்டட அல்லது ஃப்ளாட்டின் மதிப்பில் 85 சதவிகிதத்துக்கு மேல் கடன் தொகை இருக்காது.

● வட்டித் தொகை, கடன் தொகையைப் பொறுத்து மாறுபடும். 25,000 ரூபாய் வரை, 12 சதவிகிதம்; 25,001 முதல் ஒரு லட்ச ரூபாய் வரை 16 சதவிகிதம்; ஒரு லட்சத்துக்கு மேல் 16.5 சதவிகிதம்.

● 5 வருடத்திலிருந்து 20 வருடத்துக்குள் திருப்பித் தர வசதி இருக்கிறது.

● மாதா மாதம் இத்தனை ரூபாய் திருப்பிச் செலுத்த வேண்டும் என்று கணக்கிட்டுக் கொடுத்து விடுகிறோம்.

● தீ மற்றும் சேதங்களுக்கான இன்ஷூரன்ஸ் பாலிஸி எடுப்பது அவசியம். ஏனென்றால், கடன் கொடுத்த பிறகு கட்டடத்துக்குச் சேதம் ஏதும் உண்டாகும் பட்சத்தில் எங்கள் நிறுவனத்துக்குத் தகுந்த நஷ்டஈடு கிடைக்க வேண்டும்.

● எங்கள் நிறுவனத்தின் பங்குகள் வைத்திருக்கும் பங்குதாரர்களுக்கு, கடன் தருவதில் சில சலுகைகளும், முன்னுரிமையும் கொடுக்கிறோம்.

● சமீப காலமாக, ஏற்கெனவே குடியிருக்கிற வீட்டுக்கு அல்லது ஃப்ளாட்டுக்கு, விஸ்தரிப்புக்கும், ரிப்பேர் செய்வதற்கும்கூட எங்கள் நிறுவனம் கடனுதவி அளிக்கத் தொடங்கியிருக்கிறது.

# எளிதான கடனுதவிக்கு

# எல்.ஐ.சி.

"**எல்.**ஐ.சி.லோன் எடுத்தா வீடு கட்டப் போகிறீர்கள். நீங்கள் வீடு கட்டின மாதிரிதான்!" என்று ஒரு காலத்தில் கிண்டலடித்தவர்கள் உண்டு.

இன்று? கதையே வேறு. வீடு, ஃப்ளாட் கட்ட என்று, தனியாகவே எல்.ஐ.சி. ஹவுசிங் ஃபைனான்ஸ் லிமிடெட் 1989முதல் வெகு தீவிரமாகச் செயல்படத் தொடங்கியதுதான் காரணம்.

"மத்தியதர மக்களை மனத்தில் கொண்டு, விதி முறைகளைத் தளர்த்தினோம்... வாங்க இருக்கும் ஃப்ளாட் அல்லது வீட்டின் பத்திரங்களை விண்ணப்பத்தோடு சமர்ப்பித்துவிட்டால், முப்பது முதல் நாற்பத்தைந்து நாட்களிலேயே கடனுதவி கொடுத்து விடுகிறோம்!" என்கிறார்கள், இந் நிறுவனத்தின் உயர் அதிகாரிகளான டி.ஹ்ரூபர்ட்டும், கே.ஆர்.டி. சக்ரவர்த்தியும்.

"நகர்ப்புறங்களில் இருபத்தையாயிரம் ரூபாய் முதல், அதிகபட்சமாக பத்து லட்ச ரூபாய் வரை கடன் தொகை தருகிறோம். தனி வீடு கட்டுபவர்கள் ஒரு காரண்டரின் ஒப்புதலும், ஃப்ளாட் வாங்குவோர் இரண்டு காரண்டரின் ஒப்புதலும் கொடுக்க வேண்டும்!" என்கிறார் சக்ரவர்த்தி.

வட்டி விகிதம் குறைந்தபட்சம் 12 சதவிகிதத்திலிருந்து, அதிகபட்சம் 16.5 சதவிகிதம் வரை, பெறப்படும் கடன் தொகையைப் பொறுத்து நிர்ணயிக்கப்படுகிறது.

"EMI" எனப்படும் மாதாந்தரத் தவணை, அசலுக்கும் வட்டிக்குமாகக் கணக்கிடப்படுகிறது. வட்டி கணக்கிடப்படும்போது, வருடக் கடைசியில் அசலைக் கணக்கிடாமல், மாதாமாதம் கொடுக்கப்படும் அசலைக் குறைத்துக் கணக்கிடப்படுவதால், மாதாந்தரத் தவணைத் தொகை குறைவாகவே ஆகிறது. உதாரணமாக, 2லட்ச ரூபாய்க் கடனுக்கு பதினைந்து வருடத் தவணையில், மாதாமாதம் 2938 ரூபாய் செலுத்த வேண்டும். இதுவே, அசல் தொகையை வருடா வருடம் குறைத்துக் கொண்டு வரும் திட்டத்தில், 2989 ரூபாய் ஆகிறது.

**எல்.**ஐ.சி.யில் கடன் பெற, கடன் தொகைக்கு ஏற்றபடி அவசியம் இன்ஷூரன்ஸ் பாலிசி எடுத்தாக வேண்டும். ஏற்கெனவே நம் கைவசம் இருக்கும் இன்ஷூரன்ஸ் பாலிசி தொகை, கடன் தொகைக்கு ஏற்றதாக இல்லை என்றால் மீண்டும் புதிதாக ஒரு பாலிசி எடுக்க வேண்டும். பாலிசி தொகை, கடன் தொகைக்குப் பிணைப்புப் பத்திரமாக வைத்துக் கொள்ளப்படுகிறது. இத்திட்டத்தின் மூலம், கடன் பெறுபவர் இன்ஷூரன்ஸ் பாதுகாப்பும், கட்டாயச் சேமிப்பும் பெற முடிகிறது.

கடன் தொகை, ஒரு நபரின் வருமானத்தையும் அவரது கடனைத் திருப்பித் தருவதற்கான சக்தியையும் பொறுத்தது. சம்பளம் பெறுவோர் சம்பளச் சான்றிதழையும், சொந்தமாகத் தொழில் புரிவோர் வருமான வரி செலுத்தியதற்கான ஆவணங்களையும் கொடுக்க வேண்டும்.

அயல்நாட்டில் வாழும் இந்தியர்களுக்கும் (NRI) இந்தக் கடன் வசதி உண்டு. ஆனால் அயல் நாட்டில் தொழில் புரிவதற்கான சான்றிதழைக் கொடுக்க வேண்டும். 'கிருஹ ஷோபா' திட்டத்தின்கீழ், அதிகபட்சமாக 10 லட்சம் ரூபாய் வரை கடன் பெறலாம்.

"மனுவைப் பரிசீலனை செய்வதற்கான கட்டணம், கடன் தொகையைப் பொறுத்து, 250 ரூபாய் முதல் 1500 ரூபாய் வரை ஆகிறது. (அதாவது 0.5%) வருடா வருடம் தனியாக சர்வீஸ் சார்ஜ் என்று வசூலிப்பதில்லை!" என்கிறார் சக்ரவர்த்தி.

* ஹ்ரூபர்ட்



* சக்ரவர்த்தி



- நமது நிருபர்

புகைப்படங்கள்: பாலாஜி



கல்கி
ஹாப்பி
பர்த் டே மை
டார்லிங்!
மதி...
வீட்டைக் கட்டிப் பார்; ஃப்ளாட்டை வாங்கிப் பார்!
13.3.94 இதழுடன்
இலவச இணைப்பு



# Few things could make you part with your most valuable asset.

## (Trust, for instance.)

Selling real estate involves as many agonies as investing in it does. Are you really getting the best deal for your property? How reliable will your buyer be, when it comes to making payments? And if you go in for joint development, how reliable would the quality of construction be? Or just simply, should you wait a while longer before you decide to sell?

At Ashok Leyland Properties Ltd., we're interested in obtaining property in and around Madras. But, even more, we're interested in you. In ensuring that you are as satisfied with your part of the deal as we are with ours..Be it receiving your payments in time, or with the quality of construction of our apartments. And we bring to this commitment, every ounce of the reliability you associate with the Ashok Leyland Group.

If you are the proud owner of some valuable property, do call us. You can trust us to make it worth your while.

**Ashok Leyland Properties Limited**

43, CHAMIERS ROAD, MADRAS 600 028. PH : 456191/453249

*Home in on people who care*

Mudra:ALPL:5974:94

# உங்கள் வரிசேமிப்பு திட்டம் அளிக்கும் நன்மைகள் ஒன்று ? இரண்டா ? மூன்று ?

# யூலிப்

# அளிக்கும் நன்மைகள் 5 !



## யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் திட்டம்

ஒன்றுக்கு மேல் அதிக நன்மைகளை அளிக்கும் வரிசேமிப்பு திட்டம் இது.

- **வருடாந்திர டிவிடெண்ட்** திட்டத்தில் திரும்ப முதலீடு செய்யப்படும். கடந்த வருடத்தில் (அதாவது 1992-93) டிவிடெண்ட் 16.5% வரை அதிகரித்தது.
- **முதிர்வு போனஸ்** திட்டம் முடிவடையும் போது இலக்கு தொகையில் 10 வருட திட்டத்திற்கு 5% மற்றும் 15 வருட திட்டத்திற்கு 7.5% போனஸ்.
- **வரிவிலக்கு** வருமான வரிச்சட்டம் பிரிவு 88ன் கீழ் வரி விலக்கு.
- **ஆயுள் இன்சூரன்ஸ் காப்பு** மருத்துவ பரிசோதனை இல்லாமலேயே உங்கள் இலக்குத் தொகைக்கு ஈடாக ஆயுள் காப்பு.
- **இலவச விபத்துக்காப்பு** உங்கள் இலக்குத் தொகை எத்தனையாக இருப்பினும் ரூ.30,000 ற்கு இலவச விபத்துக்காப்பு.

10 வருட அல்லது 15 வருட திட்டம் ஏதேனும் ஒன்றை தேர்ந்தெடுத்து; இலக்குத் தொகை ரூ.6,000 லிருந்து ரூ.60,000 வரை முதலீடு செய்யலாம்.

**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

**உங்கள் மேலான எதிர்காலத்திற்கென.**

எல்லா செக்யூரிட்டீஸ் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவையாகும். முதலீடு செய்வதற்கு முன் உங்கள் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**மண்டல அலுவலகம்:** 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.

**கிளை அலுவலகங்கள்:** • **கோயம்புத்தூர்.** போன்: 210399 • **சென்னை.** போன்: 517101, 517190 • **மதுரை.** போன்: 38186 • **திருச்சி.** போன்: 27060.

Sista's/UTI/190/93 TM C

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka


உங்கள் மழலைச் செல்வம் அவனது
மென்மையான மிருதுவான உலகம்.
Nestlé
NESTUM
Baby Cereal
Weaning Food
Rice
mix with milk
Refill Pack
அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல்
திட உணவும் அவனைப் போலவே
மிருதுவாக இருக்கட்டும்.
உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.
ஆம். நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.
பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.
உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.
லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.
இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016
நெஸ்டம்
எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.
முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்
TS McCann/NESTUM/1492 TM

GISTERED NO. M. 4392
gistered as Newspaper in Srilanka